

"மாயாவதி ஒரு சர்வாதிகாரி!"

# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 04.01.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்





சினிமா ஸ்பெஷல்



# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL

**#1.RADIAL ROAD, PALLIKARANAI, CHENNAI- 600 100**

**PH: 22469200 66300300 9840049561. FAX: 22463282 66300400**

E-mail: info@drkamakshimemorialhospital.org. Webside: drkamakshimemorialhospital.org.





Dr. T.G.Govindarajan
President - Founder - Medical Director

Dr.Kamakshi Memorial Hospital, Pallikaranai about 2kms from Velachery, is a 150 bedded super specialty hospital has created great strides in the field of health care in a very short duration. Started just three years ago, the hospital has turned out to be a referral institution. It has borne all specialties and state-of- the art facilities under roof. However it has evolved as a main referral centre in fields such as Cardiology, Cardiothoracic surgery, neurology and neuro surgery and Cancer treatment. Being the only major hospital in this part of the city, the hospital has evolved as a major trauma care centre. With round-the- clock casualty serviced and ICU managed in house intensivists it has saved many lives of accident victims. The hospital is also planning for an on-going trauma awareness and preventive programme. The hospital is the only one of its kind in this part of the world having all specialists starting from General Medicine & Intensive Care through Radiation Oncology services under one roof. The hospital has well qualified specialists offering high quality services in various specialities of Medicine & Surgery. Recently the hospital has the pride of inaugurating PET CT – the first of its kind in Tamilnadu in collaboration with Cancer institute, Adyar.

Principle: The guiding principle of the hospital is to offer the ***latest in health care facilities at Par with international standards (obviating the need to go abroad for treatment) and also make them available to increasing numbers of our population.***

To meet the stringent demands of quality health care the services of several talented and dedicated medical professionals (both within the country and overseas) has been and a huge investment made in infrastructure and medical equipments.

## *ALL FACILITIES UNDER ONE ROOF.*



CT-SCAN



LINAC



CATH LAB



CABG - UNDER PROCESS



NEURO SURGERY



PET-CT - FIRST IN TAMILNADU

**CARDIOLOGY, NEUROSURGERY, LAPAROSCOPY & ENDOSCOPY, CARDIAC SURGERY, NEPHROLOGY, OBSTERTICS & GYNAECOLOGY, TRAUMA CARE, ORTHOPAEDICS, GASTROENTEROLOGY, NEUROLOGY, NUCLEAR MEDICINE, ENT & OPHTHALMOLOGY, UROLOGY, BLOOD BANK, MAXILLOFACIAL SURGERY, ONCOLOGY – SURGICAL – RADIATION & MEDICAL ONCOLOGY**

PET CT CENTRE AT CANCERINSITUTE (WIA)CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR,CH-20

24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE



# Dr. KAMAKSHI GROUP OF HOSPITALS

LAKSHMI NURSING HOME, PALLAVARAM

PET – CT CENTRE, ADYAR

Dr. KAMAKSHI MEMORIAL MULTSPECIALITY CENTRE

■ லைட் பாய் ■

# எந்திரன் கைமாறிய ரகசியம்!

கோடம்பாக்கத்தின் ஹாட் டிஸ்கஷனே 'எந்திரன்' கைமாறிய ரகசியம் தான். கலைஞர் - மாறன் சகோதரர்கள் சமரசப் படலம் முடிந்த கையோடு, தெம்பான முதல் அத்தியாயமாய் 'எந்திரன்' கைமாறியுள்ளது. 'எந்திரன்' முதல் பிரதிக்கு, சன் பிக்சர்ஸ் நிர்ணயித்திருக்கும் பட்ஜெட் 165 கோடி.

ஐங்கரன் இன்டர்நேஷனல் நிறுவனத்திடமிருந்து எப்படி 'சன் நெட் ஒர்க்'கின் கைக்கு மாறியது?

ஐங்கரன் நிறுவனத்தின் தாய் நிறுவனம் ஈராஸ், உலக அளவில் ஏற்பட்டுள்ள 'நிதி உருகல் நிலை' காரணமாக கடும் நிதி நெருக்கடியைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. ' 'எந்திரன்' படத்துக்கு ஏற்கெனவே ஒப்புக்கொண்ட 130 கோடி பட்ஜெட் டூமச்! எனவே, பட்ஜெட்டைக் குறைத்து விடுங்கள்' என்று ஐங்கரனுக்கு அறிவுறுத்தப்பட்டதாம்.

கோவாவில் மூன்று கோடி செலவில், பென்ஸ், பி.எம்.டபிள்யூ என கார்களை தீப்பிழம்பில் வெடிக்கச் செய்ததில் ஐங்கரனுக்கு ஏகக் கடுப்பாம். 'டம்மி காரை வெடிக்கச் செய்தால் கேமரா படம்பிடிக்காதா?' என்று கேட்டார்களாம்.

மேலும், 'அமெரிக்கா, பெரு போன்ற நாடுகளில் எடுக்கப்பட்ட இரண்டு பாடல் காட்சிகளுக்காக 30 கோடியை விழுங்கிய எந்திரனின் எமப்பசிக்கு இனி சோறு போட முடியாது; பட்ஜெட்டை வெட்டுங்கள்' என்ற ஐங்கரனின் கோரிக்கை, ஷங்கர் தரப்பில் எடுபடவில்லை; 'அப்படியானால், நடையைக் கட்டுங்கள்' என்று சொல்லிவிட, சன் நெட் ஒர்க்கை அணுகினார்களாம்.




எந்திரனின் இந்தி டப்பிங்கை அதிக விலைக்கு விற்பதும், அதை ரிலீஸ் செய்து சன் டைரக்ட் - டி.டி.ஹெச். விற்பனையை உச்சத்துக்குக் கொண்டு போவதும் இதன் பின்னணியில் இருக்கும் திட்டங்கள்!

சமரச உடன்படிக்கைக்குப் பின் எந்திரன் பட திருட்டு வி.சி.டி. இலவசமாக தென் தமிழ்நாட்டில் விநியோகிக்கப்பட மாட்டாது. அந்த அளவுக்கு இதயம் இருக்கும் என நம்பலாம்! ●

## ▪ நியூஸ் பாய் ▪

● **'சி**ன்ன தளபதி' என்று பட்டப் பெயர் வைத்துக்கொண்டாலும், அஜித்திடம்தான் எந்தவிதமான பிரச்னைக்கும் ஆலோசனை கேட்கிறார் பரத்.

***ஆலோசனை கேட்கறதோட நல்ல கதையும் கேட்டு நடிங்க.***

● **ச**மூக சேவகர் 'பாலம் கல்யாண சுந்தரம்' 'ஒலியும் ஒலியும்' என்ற படத்தில் நடிக்கிறார்.

***நிஜத்திலேயே உங்களுக்கு நடிக்கத் தெரியாதே ஐயா.***

● **அ**வ்வையின் 'ஆத்திச் சூடி' ஒரு படத்தில் பாடலாக வருகிறது. இசையமைப்பவர் 'குத்துப்பாட்டு புகழ்' விஜய் ஆண்டனி.

***ப்ளீஸ்... கொன்னுடாதீங்க... பாவம் பாட்டி.***

● **'மா**யாண்டி குடும்பத்தார்' ஷூட்டிங்கில் பட்டு வேட்டி, பட்டுச் சட்டை சகிதமாக, நிச்சயதார்த்தக் காட்சியில் இருந்த சீமானை, அதிரடியாய் போலீஸ் நுழைந்து கைது செய்திருக்கிறார்கள்.

***கல்யாணம்னு வந்தா 'மாமியார்' வீட்டுக்குப் போய்த்தானே ஆகணும்.***

● **'உ**லகம் சுற்றும் வாலிபன்' பட டைட்டிலுக்கு, சில எம்.ஜி.ஆர். விசுவாசிகள் எதிர்ப்புத் தெரிவிக்க, 'வாலிபன் சுற்றும் உலகம்' என்று திருப்பிப் போட்டிருக்கிறார்கள்.

***படத்தையும் க்ளைமாக்ஸ்ல இருந்து காட்ட ஆரம்பிச்சுடாதீங்க!***






● 'குளிர் 100°!' என்ற படத்தை இயக்கியிருக்கும் அனிதா உதீப், 'விசில்' படத்தில் இடம் பெற்ற 'அழகிய அசுரா' ஹிட் பாடலைப் பாடியவர்.

***அந்தப் பாட்டு ரொம்ப 'ஹாட்'டாச்சே... இந்தப் படம்...?***

● தான் இசையமைக்கும் பாடல் ட்யூனை முதலில் தன் மனைவியிடம்தான் பாடிக் காட்டுவாராம் விஜய் ஆண்டனி.

***பாடகியைக் கல்யாணம் பண்றதுல இது ஒரு வசதி.***

● கூகுல் இணைய தளத்தில் நடத்தப்பட்ட முதல் பத்து நட்சத்திரங்கள் சர்வேயில் நம்ம நமீதாவுக்கு மூன்றாம் இடமாம்!

***சூப்பர்டா மச்சான்...!***

● தமது நூல் வெளியீட்டு விழாவுக்குத் தலைமையேற்று 'கலைஞர்' பேசிய அத்தனை உரைகளையும், புத்தகமாகக் கொண்டுவரும் வேலையில் மும்முரமாக இருக்கிறாராம் கவிஞர் வைரமுத்து!

***சரியாகப் பயன்படுத்திக் கொள்வதில் சளைத்தவரா கவிஞர்?***

● 'நடிப்பு' சலித்து விட்டதோ என்னவோ தெரியவில்லை; 'தயாரிப்பாளர்' ஆகும் எண்ணத்தில் இருக்கிறார் நாசர். அதற்கென கதை கேட்கும் படலம் தொடர்ந்துகொண்டிருக்கிறது. இதன் பின்னணியில் நாசர் மனைவி கமீலா நாசர் இருக்கிறார் என்கிறது கோலிவுட் வட்டாரம்!

***இதைத்தான் சொன்னாங்க 'ஆணுக்குப் பின்னாடி பெண்!'*** ○




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் : **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# அழகிரி ஆளுக்கு

### முதல் கோணல்

வெள்ள நிவாரணம், பொங்கல் பண்டிகை கொண்டாட்டங்கள்... போன்றவை இருக்கும் சூழலில் மதுரை திருமங்கலம் இடைத்தேர்தல் தேவையா? என்று கலைஞர் கேட்டது, அ.தி.மு.க.வில் உற்சாகத்தைக் கிளப்பிவிட்டது. 'மனிதர் பயந்து போயிருக்கிறார்' என்று காய்களை நகர்த்தத் துவக்கினார் ஜெ.

### திரும்பவும் திருமங்கலம்!

இதே திருமங்கலத்தில் விடுதலைப் புலிகளை ஆதரித்துப் பேசியதாகக் குற்றம் சாட்டப்பட்டு, ஒன்றரை வருடம் பொடா சிறையில் இருந்த வைகோ, தாங்கள் வென்ற தொகுதியைத் தாரை வார்த்தது பரிதாபம். இறந்துபோன வீர.இளவரசன் குடும்பத்தினர், பொடாவில் கைதான அழகு சுந்தரம்... ஆகியோர் சீட் கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

### சுதாரித்த கலைஞர்

அ.தி.மு.க.வின் அதிரடியை எதிர்பாராத கலைஞர், வேட்பாளரை அறிவிப்பதில் முந்திக்கொள்ள வேண்டும் என்று முனைய, மதுரையிலிருந்து எஸ்.ஆர்.கோபியைப் போடவும் என்று அழகிரி ஆணை வந்தது. அரசுக்கு எதிரான எண்ணங்கள் மக்களிடையே பரவலாக இருக்க, ஒரு பெண்ணை நிறுத்தினால் கூடுதலாக வோட்டுகள் கிடைக்கலாம் என்ற நோக்கில், லதா அதியமானை நிறுத்திவிட்டார் கலைஞர்.

### அழகிரியைப் பிடிக்கவில்லை!

சேடப்பட்டித் தொகுதியில் சட்டமன்ற உறுப்பினராக இருந்த அதியமான், பக்கா ஸ்டாலின் ஆதரவாளர். அழகிரி ஆதிக்கம்பெற்ற மதுரை தி.மு.க. அரசியலில் தாக்குப்பிடிக்க முடியாமல், தமது இறுதிக் காலங்களில் அமைதி காத்து வந்தவர்.

# அ.தி.மு.க.வில் சீட்!?

### கோபித்த கோபி

இடது கம்யூனிஸ்ட் மாநகராட்சி உறுப்பினர் லீலாவதி, தா.கிருஷ்ணன் கொலை வழக்குகள், தினகரன் எரிப்பு வழக்குகளில் கைதான மன்னன், முபாரக் மந்திரி, அட்டாக் பாண்டி ஆகியோருக்குப் பொறுப்புகளை வாங்கிக்கொடுத்து விட்டார் அழகிரி. கோபிக்கு திருமங் கலம் வாய்ப்பைக் கொடுக்கலாம் என்பது அழகிரி எண்ணம். கலைஞரும், ஸ்டாலி னும் அவரது முயற்சியில் முட்டுக்கட்டை போட, கோபி கோபித்துக்கொண்டு பொன் னாச்சி மலை ஏறிவிட்டார். அழகிரி அப் செட்.

### அம்மா ஆளான அழகிரி சிஷ்யர்

அ.தி.மு.க. வேட்பாளரான முத்து ராமலிங்கம், 1996ல் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினராக திருமங்கலத்தில் தேர்ந் தெடுக்கப்பட்ட அழகிரி சிஷ்யர். மதுரை மாவட்ட இளைஞரணி செயலாளராக இருந்த இவர், ஒருமுறை ஸ்டாலின் மதுரை வந்தபோது வரவேற்றதால் அழகிரி கோபத்துக்கு ஆளானார். பின் னர் அழகிரி அவரை ஒதுக்க, ஸ்டாலினும் கடுப்படிக்க, வெறுத்துப்போய், அ.தி.மு.க. வில் இணைந்தார். தா.கிருஷ் ணன் கொலை வழக்கில் 99.99 சதவிகித சாட்சிகள் பல்டியடிக்க, அழகிரிக்கு எதிராகச் சாட்சி சொன்ன ஒரே தைரியசாலி முத்துராமலிங் கம்.


* முத்துராமலிங்கம்

### ஜகா வாங்குகிறாரா அழகிரி?

பரபரப்பாகக் களத்தில் சுற்றி வருவ தற்குப் பதில் ஆட்சி மற்றும் கட்சிப் பிர முகர்களை ரிமோட் மூலம் இயக் கினால், எதிர்க்கட்சிகள் தம்மை நேரடி யாகக் குற்றம் சாட்ட முடியாது என்ற நோக்கில் ஒதுங்கப்பார்த்தார் அழகிரி. இது ஒரு காரணம் என்றால் தமக்குப் பிடிக்காத வேட்பாளர் என்பதும் மற்றொரு காரணம். பட்டும், படாமலும் இருக்கவேண்டும் என்ற முடிவில் இயங்கும் அழகிரி, தி.மு.க. வேட்பாளர் தோற்பதற்கு உள்ளடி வேலை கள் செய்வாரா என்பதுதான் சஸ் பென்ஸ். 2001ல் தி.மு.க. தலைமையின் மீது கோபத்தில் இருந்த அழகிரி, சில தொகுதிகளில் தி.மு.க. தோற்பதற்குக் காரணமாக இருந்தார் என்று அப்போது பேசப்பட் டது.

### கலைஞருக்கு ஆறுதல்

தே.மு.தி.க.வுடன் ச.ம.க.வும் களத்தில் இருப்பதால், ஆட்சிக்கு எதிரான வோட்டுக்கள் குறைந்து தி.மு.க.வுக்குச் செல்லும் என்பது பொதுவான எதிர் பார்ப்பு. ஆனால், அவ்வளவு சுலபத்தில் அ.தி.மு.க. விட் டுக் கொடுத்து விடாது. தி.மு.க.வுக்குப் பல ஸ்பீட் பிரேக்கர்கள் போட்டு உச் சக்கட்ட உஷ்ணத்தைக் கிளப்பத் திட்டமிடுகிறது அ.தி.மு.க. தலைமை. ●

**கதிரவன்**

''ஒரு படத்தில் ஒரு பாட்டு ஹிட் ஆனாலே பெரிய விஷயம். அனைத்துப் பாடல்களும் ஹிட்டாகும் அதிசயம் ராம ராஜன் படங்களில்தான் நிகழ்ந்திருக்கிறது. இப்போது வரவிருக்கும் 'மேதை'யிலும் அந்த அதிசயம் நிகழும்'' என்கிறார் இயக்குநர் சரவணன்.

படத்தின் ஆறு பாடல்களில், இறுதியாக ரிக்கார்டிங் செய்யப்பட்டிருக்கிறது யுகபாரதி எழுதிய, 'ஒங்ககிட்ட ரெண்டு கண்ணும் ஒட்டிக்கிடுச்சி' பாடல். எதிர் பார்த்ததை விடவும் திருப்திகரமாக வந்திருப்பதால் ஒன்றுகூடி நெகிழ்ந்தார்கள் இசையமைப்பாளர் தினா, இயக்குநர் சரவணன், பாடலாசிரியர் யுகபாரதி.

''ராமராஜன் படத்துக்கெல்லாம் பெரும்பாலும் ராஜாசார்தான் மியூசிக். இந்தப் படத்துக்கும் அவருதான் மியூஸிக்'' என்று சரவணன் சொல்ல, அதிர்ச்சியிலும் குழப்பத்திலும் எதுவும் பேசவில்லை தினாவும் யுகபாரதியும்.

''தினாவுக்குள் இருந்த இளையராஜாவைத் தூண்டி எழுப்பியிருக்கு இந்த மேதை'' என்று சரவணன் சொல்லவும், ''உட்கார்ந்து யோசிப்பீங்க போலிருக்கு'' என்று யுகபாரதி சிரித்தார்.

''ஐயோ... அப்படிச் சொல்லாதீங்க. ராஜா சார் தப்பா நினைப்பாங்க'' என்று தினா பதறினார்.

''இளையராஜா சாரை உயர்த்திதான் சொன்னார்'' என்று யுகபாரதி சப்போர்ட்டுக்கு வர, ''அப்படின்னா சரி'' என்றார் தினா.

''ராமராஜன் சார் படத்துக்குப் பாட்டு எழுதணும்னு சொன்னப்போ, அவரோட பழைய படத்துப் பாடல்கள்தான் ஞாபகத்துக்கு வந்துச்சு.

ஆனா நீங்க (சரவணன்) பாட்டு ரொம்ப இயல்பா இருக்கணும். உங்க லைஃப் அனுபவத்தை எழுதுங்கன்னு சொல்லிட்



* சரவணன் * யுகபாரதி * தினா

# ''ஒங்ககிட்ட ரெண்டு கண்ணும் ஒட்டிக்கிச்சு!''

டீங்க. அதனால ரொம்பவே ஈஸியா யிடுச்சு'' - யுகபாரதி.

''திருடா திருடி படத்துல 'மன்மத ராசா' தினா வேற. இந்தப் படத்துல வர்ற ஆறு சாங்ஸ்லையுமே கேட்டுப் பாருங்க. இந்த தினா வேற'' - தினா.

''நான் முதல் படமே ராமராஜன் சாரை வெச்சு எடுக்கக் காரணம், அவரோட பழைய படங்களோட் தாக்கம்தான்'' - இயக்குநர் சரவணன்.

''ராமராஜன் ஸாருக்கு ஒரு கேப் விழுந் திடுச்சு. அதை ஃபில் பண்ணுற மாதிரி ஒரு சப்ஜெக்ட் தேடிக்கிட்டு இருக்குறா ருன்னு நண்பர் சொன்னார். நானும் போய்க் கதையைச் சொன்னேன். இதுக்கு முன் னால கேட்டு வைச்சிருந்த இருபது கதை கள விட்டுட்டு என் கதையை செலக்ட் பண்ணிட்டாரு.

அவருக்கு ஏத்த மாதிரி சின்னச் சின்ன கரெக்ஷன் சொன்னாரு. பண்ணிட்டேன். ராமராஜன் பெரும்பாலும் ஸாங் கம்போசிங்குக்கு வர மாட்டார். ஆனா இந்தப் படத்தோட ஆறு சாங் கம்போசிங் குக்கும் உட்கார்ந் திருக்கிறார்'' - சரவணன்.




யுகபாரதி, ''எனக் குக் கல்யாண நிச்சய தார்த்தம் முடிஞ்ச சமயம் அது. அப்பத் தான் சரவணன் இந்தப் பாட்டு சிச்சு வேஷனை எனக்குச் சொன்னார். பொண்ணு பார்க்கிறது... அதை நெனைச்சு பொண்ணு பாடுறது... அப்புறம் கல்யா ணம்... அத நெனைச்சு பொண்ணு பாடு றது... கல்யாணத்துக்குப் பிறகு அந்தப் பொண்ணை எப்படி வைச்சுக்கப் போறேன்னு மாப்பிள்ளை பாடணும்... இப்படி மூணு காலத்துல பாட்டு வேணும்னு சொன்னவர்,

புதுசா எதுவும் யோசிச்சு எழுதாதீங்க. நீங்க பொண்ணு பார்க்கப் போனப்போ அவங்க என்ன ஃபீல் பண்ணினாங்கன்னு கேட்டு அதையே எழுதுங்கன்னு சொன் னார்'' என்று தினாவிடம் சொன்னார்.

'ஒங்க கிட்ட ரெண்டு கண்ணும்/ ஒட்டிக்கிடுச்சி/அது/ஒட்டிக்கிட்டு நெஞ்ச வந்து/தட்டிப்புடிச்சி/தட்டிப்புட்டு மெல்ல மெல்ல/ஒத்துக்கிடிச்சி/என் அந்தரங்கம் அத்தனையும் பத்திக்கிடுச்சி' - என்று பல்லவியைப் பாடினார் தினா.

நிச்சயதார்த்தம் முடிஞ்சதும்...

'குமரி மாறினேன்/குழந்த போலவே - ஒங்க/அன்பு என்ன வந்து மோதவே/ கொழம்பிப் போகிறேன்/ஒறக்கம் நீங்கவே - ஒங்க கண்ணுக்குள்ள என்ன/ காணவே

வேறெதுவும் தேவையில்ல/இனி மேல் - ஒங்க/தோளோடு வேணுமிங்க/ மணமாலை

மேதை ஒங்கள சீதை தேடுறா/ மெட்டிச் சத்தம் எப்ப வரும்/கூறுங்க?'- முதல் சரணத்தைப் பாடினார் தினா.



''திருமணம் முடிஞ்சு வந்தப்போ சரவணன் சார், உங்க வொய்ஃப் மேல எவ்ளோ அன்பு வைச்சிருக்கீங்க. அவங்கள எப்படியெல்லாம் வைச்சுக்கணும்னு விரும்புறீங்கன்னு கேட்டார். நான் சொல்ல ஆரம்பிச்சதும் சொல்லாதீங்க. இதை அப்படியே எழுதிக் கொடுத்திடுங்க என்றார்...'' - யுகபாரதி.

''நீங்க பாடினதும் ஞாபகத்துக்கு வந்துச்சு. சித்ரா மேடம் இந்த பாட்டைப் பாடும்போது ஒங்ககிட்ட நிறைய சொன்னதா சொன்னீங்க...'' இது யுகபாரதி.

''பாட்டை படிச்சுப் பார்த்ததுமே ஒரே சந்தத்துல அழகா அமைஞ்சிருக்கு. இது எனக்கு மறக்கமுடியாத பாட்டுன்னு சொன்னாங்க'' - தினா.

''ஒரே சந்தத்துல இந்தப் பாட்டு அமையணும்னு நினைக்கலை. அதுவாவே அமைஞ்சிடுச்சு'' - யுகபாரதி.



''கம்போசிங்குக்காக தினா சாரோட ஸ்டுடியோவுக்கு வரும்போதே இந்தப் பாட்டு வரிகளைக் காட்டினேன். அவரு டக்குன்னு பாடிக் காட்டிட்டார். அதனாலதான் ஸ்டுடியோவுக்கு வந்த உடனேயே டியூன் போட்டுட்டார்'' என்று சரவணனிடம் யுகபாரதி சொல்ல,

''படத்துல ஆறு பாட்டு வர்ற மாதிரி படத்தோட புரொடியூசரும் ஆறு பேர். ஆளுக்கு ஒரு பாட்டை சமர்ப்பணம் பண்ணுறேன்'' என்றார் சரவணன்.

'நிலவு தேயலாம்/நினைவு தேயுமா - உன்ன நெஞ்சுக்குள்ள வச்சி/தாங்குவேன்

பொழுது போகலாம்/உறவு போகுமா/உன்ன/செல்லம் கொஞ்சி கொஞ்சி/சீண்டுவேன்

ஆகாயம் பூலோகம்/நீதானே - அன்பு/கைசேர நூறாண்டு/வாழ்வோமே

கோடி மின்மினி காட்டும் உன்விழி/என்னவிட்டு எட்டிச்செல்ல/ஒத்துக் கொள்ளுமா?' - இரண்டாவது சரணத்தையும் தினா பாடினார்.

''இந்தப் பாட்டை எங்க ஷூட் பண்ணப் போறீங்க?'' என்று சரவணனைப் பார்த்துக் கேட்டார் யுகபாரதி.

''மணிப்பூர்ல ஷூட் பண்ணலாம்னு இருந்தோம். அங்க இப்ப ஜீரோ டிகிரிங்குறதால கேரளா, சாலக்குடியில ஷூட் பண்ண முடிவு பண்ணியாச்சு. ராமராஜன் சாரும் கவுசிகாவுக்குமான அந்தப் பாட்டு எல்லோருக்கும் ஒலிக்க ரொம்ப நாள் இல்ல...'' என்று சரவணன் சொல்ல, ''வாங்க காப்பி சாப்பிடுவோம். அப்புறம் கன்ட்டினியூ பண்ணலாம்...'' என்றார் தினா.

படங்கள் : ஸ்ரீஹரி



# வெண்கலக் குரலில் வராளி!

■ தேவவிரதன் ■

ஐஸ்வர்யா வித்யா ரகுநாத் 'வல்லபநாயகஸ்ய' என்ற பேகட
ராகத்தில் ஆரம்பித்ததைக் கேட்டபோது, கச்சேரி நல்ல வேகம்
பிடித்துச் செல்லும் என்றுதான் தோன்றியது.

விரைவிலேயே ஐஸ்வர்யா வராளிக்குள் புகுந்தார். பாவம்
மற்றும் அழகு சேர்த்து இந்த ராகத்தை அளிப்பது ஒன்றும் அத்தனை
எளிதான காரியமில்லை. கவனமற்று மேலே போனால் கதறும்.
கீழே சஞ்சரிப்பதும் கஷ்டம். மத்திய ஸ்தாயி
யிலேயே கட்டி ஆள வேண்டும். கார்வைகளும்,
பிருகாக்களும், அகாரங்களும் அளவான
விகிதத்தில் சேர்த்து ரசிக்கும்படி செய்வது
சிக்கலான சமாச்சாரம்தான் என்றாலும்,
ஐஸ்வர்யாவின் வராளி ஐந்துக்கு நாலு பழு
தில்லை. குரல் வளமாக இருந்ததால், கார்வைகளும், ரவை சங்கதிகளும்
இயல்பாக விழுந்தன.

ஆலாபனையைத் தொடர்ந்து 'கருண எலா கண்டே' என்ற பாடல். இதில் 'பரமாத்
முடு ஜீவாத்முடு' என்ற வரியில் ஐஸ்வர்யா சற்று மேம்போக்கான நிரவலுடன் நிறுத்
திக்கொண்டு விட்டார்.

முக்கிய ராகமாக ஐஸ்வர்யா பாடியது கீரவாணி. சினிமா பாடல்களிலிருந்து கச்சேரி
மேடைவரை கன கச்சிதமாகப் பொருந்தும் ராகம். ஆழம், அழகு, பாவம் இவற்றுடன்
விஸ்தரிப்பதற்கு நல்ல வாய்ப்புகள் உண்டு. ஐஸ்வர்யா கீரவாணியை ரசிக்கும்படி
எல்லா ஸ்தாயிகளிலும் சஞ்சாரம் செய்து வழங்கினார். வயலின் வாசித்த இளைஞி
அதிதி கிருஷ்ண பிரகாஷ் தனி அக்கறையுடன் ராகங்களைக் கையாண்டது பாராட்
டுக்குரியது.

'கலிகியுண்டே கதா' என்ற தியாகராஜ க்ருதியும், சரணத்தில் 'பாகுக ஸ்ரீரகு' என்ற
இடத்தில் நிரவல் - ஸ்வரங்களும் சேர்ந்தன. ஸ்வரங்களில் சற்று பதற்றமும், அவசரமும்
தெரிந்தனவென்றால், பின்னால் வந்த 'ஏமந்துனம்மா' என்ற கேதாரகௌளை
க்ஷேத்ரக்ஞர் பதமும், 'அதி நீயை மருலு கொன்ன' என்ற யமுனா கல்யாணி ஜாவளியும்
தொய்வை ஏற்படுத்தின!

மிருதங்கம் வாசித்த சுவாமிமலை கிரிஷும் இளைஞரே. அவரது வாத்தியம்
அவருக்குச் சற்றுத் தொந்தரவு கொடுத்துக்கொண்டேயிருந்தது! தட்டிக் கொட்டி
சமாதானம் செய்ய வேண்டியிருந்தது! தனியாவர்த்தனம் குறை சொல்ல முடியாத
அளவுக்கு இருந்தது.

நாரதகான சபா மினி ஹாலில் ஒரு மத்தியான வேளையில் நடந்தது ஐஸ்வர்யா
வித்யா ரகுநாத்தின் கச்சேரி. ஐஸ்வர்யாவுக்கு நல்ல காத்திரமான வெண்கலக் குரல்.
அதோடு சொல் சுத்தம், தெளிவு இரண்டும் இருப்பதால் அவர் கர்நாடக சங்கீத
உலகுக்குப் பொருத்தமானவர். ஆனால், குரலைக் கொடுக்கும் விதத்திலும் கச்சேரி
நிர்வாகத்திலும் கவனம் செலுத்தி உழைப்பது அவசியம். ○

# நவரசப்



**பாடகர் பிரஸன்னா உணர்ந்த நவரசங்கள்...**

☺ ஷங்கர் மஹாதேவனின் 'விஷ்வே ஷரய்யா' ஆல்பத்தைக் கேட்டால் விவரிக்க முடியாத **சிலிர்ப்பைத்** தரும்.

☺ 'மாயா பஜார்' படத்தில் வரும் 'கல்யாண சமையல் சாதம்' பாடல் **சிரிப்பை** வரவழைக்கும்.

☺ நான் பாடி, 'டாக்ஸி 477' திரைப் படத்தில் இடம்பெற்றிருக்கும் 'கண்ணீரைப் போல வேறு நண்பன் இல்லை' பாடலில் **உருக்கம்** அதிகம்!

☺ நான் பாடிய, 'திருக்குறள்' இசை ஆல்பம் என்னை ரொம்ப **ஆச்சரியத்தில்** ஆழ்த்தியது!

☺ 'அம்மா என்றழைக்காத உயிர் இல்லையே' பாடலைக் கேட்டால் **கருணை** பொங்கும்.

☺ 'சின்னப் புறா ஒன்று' பாடல் ஒருவிதமான **பயத்தை** உண்டாக்கும்!

☺ 'மந்திராலயா' என்ற இசை ஆல்பத்தில் ஸ்ரீராகவேந்திரர் மேல் பாடியிருக்கும் பாடல்கள், மனத்துக்கு **அமைதியைக்** கொடுக்கும்.

☺ 'காதலில் விழுந்தேன்' 'நாக்க மூக்க' பாட்டைக் கேட்டா **சந்தோஷம்** கொப்பளிக்கும்.

☺ எந்த மொழிப் பாடலாக இருந்தாலும், தப்புத்தப்பான உச்சரிப்பால பாட்டோட ஜீவனைக் குலைக்கறவங்களை நினைச்சா **கோபம்**!

**கவிஞர் நா. முத்துக்குமார் எழுதிய நவரசங்கள்:**

**பயம்:** 'காந்தத்த மண்ணுல தேச்சு பேய ஆட்டினோம்'

('வெய்யில் படத்தில் 'வெயிலோடு விளையாடி' பாடல்)

**கோபம்:** 'சாமிக்குப் படைக்கிற மனுஷனைக் கும்பிட்டோம்

சாக்கடை அள்ளுற கைகள விட்டுட்டோம்'

('தம்பி' படத்தில் இடம்பெறும் 'என்னம்மா தேவி ஜக்கம்மா' பாடல்)



**'நடித்ததில் நவரசம்' நடிகை தேவயானியிடம் கேட்டோம் :**

☺ பாரதி படத்தில் **'அச்சம், மடம், நாணம்'**

☺ கோலங்கள் தொடரில் **'தன்னம்பிக்கை'**

☺ பஞ்சதந்திரத்தில் **'நகைச்சுவை'**

☺ சூர்யவம்சத்தில் 'பணிவு' கலந்த **'துணிவு'**.

☺ காதல் கோட்டையில் காணாமலே **'காதல்'**.

☺ ஆனந்தம் படத்தில் **'பாசம்'**.

☺ அழகி திரைப்படத்தில் **'கருணை'**.

# பேட்டிகள்




■ நளினி சம்பத்குமார் ■

**சிரிப்பு:** 'ஐயனாரத்தான் ஆடு கும்பிட்டா சைவமாயிட்டாரு தெரிஞ்சுக்கோ'

('ரன்' படத்தில் இடம்பெறும் 'தேரடி வீதியில்' பாடல்)

**அழுகை:** 'கல்லறையில்கூட ஜன்னல் ஒன்று வைத்து உந்தன் முகம் பார்ப்பேனடி'

('தீபாவளி' படத்தில் வரும் 'போகாதே' பாடல்)

**ஆச்சரியம்:** 'கறுப்பு வெள்ளை பூக்கள் உண்டா? உன் கண்ணில் நான் கண்டேன் - உன் கண்கள் வண்டை உண்ணும் பூக்கள் என்பேன்'

('கஜினி' படத்தில் வரும் 'சுட்டும் விழிச் சுடரே')

**கருணை:** 'ஆடு மாடு மேல உள்ள பாசம்

வீட்டு ரேஷன் கார்டில் சேர்க்கச் சொல்லி கேட்கும்'

('சிவாஜி படத்தில் வரும் 'பல்லேலக்கா' பாடல்)

**காதல்:** 'காதல் என்பது காப்பியப் போல

ஆறிப் போனா கசக்கும்'

(போக்கிரி படத்தில் வரும் 'வசந்த முல்லை' பாடல்)

**நாணம்:** 'நான் குழந்தை என்று நேற்று நினைத்திருந்தேன்.

அவன் கண்களிலே என் வயதறிந்தேன்.'

('காதல்' படத்தில் வரும் 'தண்டட்டி கருப்பாயி')

**அமைதி:** 'ஒரு நாளில் வாழ்க்கை இங்கே எங்கும் ஓடிப் போகாது.

மறுநாளும் வந்துவிட்டால் துன்பம் தேயும் தொடராது'

('புதுப்பேட்டை' படத்தின் பாடல்)

**டைரக்டர் சிம்புதேவன் ரசித்த நவரசங்கள் :**



☺ 'ராஜ பார்வை' கமல்ஹாசனின் **'மென்மை'**.

☺ 'அந்த நாள்' சிவாஜி கணேசனின் **'ஆக்ரோஷம்'**.

☺ 'அஞ்சலி' ரேவதியின் **'சோகம்'**.

☺ 'காவல் தெய்வம்' எஸ்.வி. சுப்பையாவின் **'கண்டிப்பு'**.

☺ 'தெனாலி' கமல்ஹாசனின் **'குழப்பம்'**.

☺ 'அரச கட்டளை' சரோஜாதேவியின் **'கோபம்'**.

☺ 'நந்தா' சூர்யாவின் **'முரட்டுத்தனம்'**.

☺ 'சாது மிரண்டால்' நாகேஷ் கதாபாத்திரத்தின் **'நகைச்சுவை'**.

☺ 'தேவர் மகன்' சிவாஜிகணேசனின் **'வீரம்'**.

**என்.**பாலசுப்பிரமணியன்,
அண்ணாநகர்

**மாதங்களில் சிறந்தது 'மார்கழி' என்பது எதனால்...?**

தை பிறந்தால் வழி பிறக்கும்... ஆனால், மார்கழி பிறந்தால்தான் தையே பிறக்கும். வழிக்கு வழி காட்டிய 'கழி' மார்கழி.

என்.கோமதி, நெல்லை

**கடவுளுக்கு மட்டும் எதற்கு நான்கு கைகள்...?**

கனவில் வந்த கடவுளிடம் இதே கேள்வியைக் கேட்டேன். 'ஒரு கை படைக்க, ஒரு கை காக்க... ஒரு கை அழிக்க' என்று கூறிவிட்டு நைஸாக நழுவப் பார்த்த கடவுளின் அந்த நாலாவது கையைப் பிடித்து நிறுத்தி 'இது எதற்காக?' என்று கேட்டேன். 'இது மாதிரி எக்கச்சக்கமான கேள்விக்குப் பதில் சொல்ல முடியாம தலை முடியைப் பிச்சுக்கத்தான்' என்று கூறிவிட்டு கலைந்தார் கடவுள்.



தாமல் கண்ணன்,
பெங்களூர்

**சிரிப்பதால் ஆயுசு கூடுமா...? குறையுமா...?**

கூடும். அதேசமயம் குறையும். வாய் விட்டுச் சிரித்தால் வாழ்நாள் கூடும்; பாழ்நாள் குறையும். சிரிப்பது காதலியோடு இருப்பதற்கு சமானம், டைம் போறதே தெரியாது... நீண்ட ஆயுள்கூட நிமிடமாய்த் தோன்றும். 'மரி மரி நின்னே'வை முந்திக்கொண்டு 'சிரி சிரி முன்னே'... 'நோ வொரி வொரி பின்னே.'

அ. யாழினி பர்வதம், சென்னை

**ஜனவரி 7ல் பிறந்த நாள் கொண்டாடப் போகும் என் தந்தை (அண்ணா**

# கடவுளுக்கு

**அன்பழகன்) அவர்களுக்கு என்ன பரிசு கொடுக்கலாம்...?**

முதியோர் இல்லத்தில் சேர்த்து, தாய் - தந்தையை மறந்த நாள் கொண்டாடும் இந்தக் காலத்தில், பிறந்த நாள் கொண்டாட யோசித்த... அதை மூணாவது மனுஷனான என்னிடம் கலந்தாலோசித்த, இந்தப் பாசத்தைவிட பெரிய பரிசு எது மகளே... 'யாழினி பர்வதம் அவர்களே', நான் தருகிறேன் உங்களுக்குப் பரிசு 'வாழி நீ பர்வதம்'.

**நெல்லை த.ஞா.செ, பிரியம்மாள்புரம்**

**மனைவியிடம் கேட்கக் கூடாத கேள்வி எது?**

''ஏம்மா பேசாம இருக்கே?''

**த. புகழேந்தி, கூகூர்**

**விடியும்போது யார் முகத்தில் விழித்தால் நல்லது...?**

விடியும்போது விழித்தாலே ரொம்ப நல்லதுதான்... முன்பு ஒரு சமயம், விடியற்காலையில் பல் துலக்கப் போனபோது; தோட்டத்தில் இரவு முழுக்க விழித்திருந்து அலுத்துப் போய் தூங்கிக் கொண்டிருந்த திருடனை எழுப்பி, அவன் முகத்தில் விழித்தேன். அவன் எழுந்து என்னைப் பார்த்து திருட்டு முழி முழித்தான். அவன் முகத்தில் விழித்த எனக்குத் திருடனைப் பிடித்ததால் அன்று பாராட்டு; என் முகத்தில் விழித்த அவனுக்கு ஆறு மாசம் ஜெயில் வாசம்.

**சி. கார்த்திகேயன், விருதுநகர்**

**தாங்கள் 'ஸ்பெக்ஸ்' போடுவது எதற்காக...?**

எல்லோரும் என்னைப் பார்க்க வேண்டும் என்பதற்காக, அப்போது போட ஆரம்பித்தேன். எல்லோரையும் நான் பார்க்க வேண்டும் என்பதற்காக இப்போது போட்டுக் கொண்டிருக்கிறேன். அப்போது ஆர்வக் கோளாறு. இப்போது பார்வைக் கோளாறு.




**என். சண்முகம், திருவண்ணாமலை**

**'ஏற்பது இகழ்ச்சி' சரி... அப்புறம் 'ஐயம் இட்டு உண்'... முரண்பாடாக இருக்கிறதே...?**

ஏற்பது இகழ்ச்சி - உழைக்காமல் உண்ணும் சோம்பல். ஐயம் இட்டு உண் - வலியச் சென்று வறுமையை விரட்டும் விருந்தோம்பல். அவ்வையின் பாடல் சமுதாயத்தைக் காக்கும் அரண், அதில் சற்றும் இருக்காது முரண். ஐயம் இட்டு உண்ணாதவரை நாம் ஏற்பதுதான் இகழ்ச்சி.

**பி. சிவா, பாளையங்கோட்டை**

**பெண்கள் தாலிக்குக் கொடுக்கும் மரியாதையை, கணவனுக்குக் கொடுக்கிறார்களா...?**

அதை அடகு வைத்து 'டாஸ்மார்க்' செல்லாத கணவனுக்கு 'பாஸ் மார்க்' மரியாதை கொடுப்பார்கள். ●

# நான்கு கைகளா?



# கல்கி



2009 ஜனவரி 4
ஸர்வதாரி மார்கழி 20
மலர் : 67
இதழ் : 23

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## நிறுத்துங்கள் நிழல் யுத்தத்தை!

“பாகிஸ்தான் பல்டி அடித்துவிட்டது; உலக நாடுகள் ‘பாக்.’கைப் போதுமான அளவு வற்புறுத்தவில்லை; நாம் தரும் சாட்சியங்களை பாக். கண்மூடித்தனமாக நிராகரிக்கிறது...” என்கிற ரீதியில் நமது அயலுறவுத் துறை அமைச்சரும் இதர பல தலைவர்களும் புலம்புவதை உடனடியாக நிறுத்த வேண்டும்.

மும்பைத் தாக்குதலுக்கு எதிர் நடவடிக்கையாக இரண்டு மார்க்கங்கள்தான் உள்ளன. ஒன்று பாகிஸ்தானின் பயங்கரவாத முகாம்களைத் தாக்குவது; மற்றது - அயலுறவுத் துறையின் சுறுசுறுப்பால் சர்வதேச ஆதரவு பெற்று, பொருளாதாரத் தடைகள் போன்ற பல்வேறு விதங்களில் அந்நாட்டுக்கு அழுத்தம் கொடுப்பது.

இவ்விரண்டினுள் பயங்கரவாத முகாம்கள் மீது தாக்குதல் என்பது மிக வேகமாகவும் எதிர்பாராத வகையிலும், சம்பவத்தின் சூடு ஆறும் முன்னரும் நிகழ்த்தப்பட்டிருக்க வேண்டும்.

ஆனால், அவ்வாறு நிகழ்த்தப்படவில்லை. பொது மக்கள் உயிர்ச் சேதம் சிறிதளவு ஏற்பட்டிருக்கும்; உலக அளவில் சில கண்டனக் குரல்களும் இதனால் விளைந்திருக்கும்; என்றாலும் இந்தியாவின் செயல்பாட்டை பாக். தூண்டியது என்கிற நியாயம் நம் பக்கம் இருந்திருக்கும்.

இப்போது இந்தியாவும் பாகிஸ்தானும் பரஸ்பரம் ‘தாக்குவாயா?’ ‘தாக்கிவிடு பார்க்கலாம்’ என்பது போன்ற மிரட்டல்களிலும் வெறும் அச்சுறுத்தல் செயல்களிலும் ஈடுபடுவது, சிறுபிள்ளைத்தனமாக இருப்பதுடன் பிரச்னையை மேலும் சிக்கலாக்குகிறது.

மும்பைத் தாக்குதலில் பாகிஸ்தானியர் ஈடுபட்டதற்கான சாட்சி என்ன என்று




பாகிஸ்தான் தரப்பில் கேட்பது, பூதக்கண்ணாடி தரப்பட்ட பிறகும் கைப்புண்ணைக் காண மறுக்கும் அக்கிரமம்தான். என்றாலும், பாகிஸ்தான் அரசு இயந்திரம், தனது நாட்டுக்கு அவப் பெயர் ஏற்படும் விதத்தில் பேசாது என்கிற அடிப்படை விஷயத்தை நாம் உணர வேண்டும்.

இந்தியாவிடம் பாகிஸ்தானுக்கு எதிராக உள்ள சாட்சியங்களை, வகையாகத் தொகுத்து, மறுக்க இயலாத வடிவத்தில் உலகறிய வெளியிடுவது பாகிஸ்தானின் வாயை அடைத்துவிடும்.

இதைச் செய்வதற்கு மதி நுட்பமும், திட்டமிடலும், ராஜதந்திரமும் தேவை. நமது அரசினால் இதனைத் தனித்துச் செய்ய இயலாவிட்டால், நமக்கு ஆதரவாகக் குரல் கொடுத்துள்ள அமெரிக்கா, பிரிட்டன் உதவியுடன் இந்த ஆதாரங்களை வகைப்படுத்தி வெளியிட்டு பாக்.கை வீழ்த்துவதுடன் உலகையே நிமிர்ந்து உட்காரச் செய்யலாம்.

உலகம் ஏற்கும் அளவுக்கு நிறைய ஆதாரங்கள் உள்ளன. குறிப்பாக பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ. உளவு அமைப்பு, அந்நாட்டு ராணுவத்தின் கட்டுப்பாட்டுக்குள் இருந்துகொண்டு, பயங்கரவாதத்துக்கு ஆதரவு அளித்து வருவது குறித்து, அமெரிக்க வெளியுறவுத் துறைச் செயலர் காண்டலீஸா ரைஸ், பகிரங்கமாகவே பேசியிருக்கிறார்.

இதுபோன்ற செயல்பாடுகளுக்கு ஆதாரங்கள் வெளியிடும் வேளையில், பலமான பொருளாதாரத் தடைகளையும் பாகிஸ்தான் மீது விதிக்க உலக நாடுகள் முன் வரும். அந்த அழுத்தத்தின் பளு தாளாமல் பாகிஸ்தான் தனது நிழலில் உள்ள பயங்கரவாத அமைப்புகளுக்குச் சமாதி கட்ட நிர்ப்பந்திக்கப்படும்.

இதுபோன்ற ஆக்கபூர்வமான திட்டங்கள் நோக்கி இந்தியா இன்னும் ஓர் அடிகூட எடுத்து வைக்காமல், பாகிஸ்தானுடன் நிழல் யுத்தம் நிகழ்த்திக் கொண்டிருப்பதென்பது, நிஜ யுத்தத்தைக் காட்டிலும் அபாயகரமானது.

தற்போதைய பொருளாதாரச் சூழலில், ஒரு யுத்தம் நடந்தால், குறைந்தபட்சம் இரண்டு தலைமுறை மக்கள் நிலைகுலைந்து போவார்கள்.

உள்துறை அமைச்சரும் வெளியுறவுத் துறை அமைச்சரும் பாதுகாப்புத் துறை அமைச்சரும் இணைந்து, பாகிஸ்தானைப் படிய வைக்கப் புதிய பாதை வகுக்கட்டும். உலக நாடுகளுடன் கைகோத்து, அதில் நடக்கட்டும். அதே சமயம், எச்சரிக்கை உணர்வோடு பாதுகாப்பையும் உளவுத் துறையையும் மேம்படுத்தட்டும்! ●




மூதறிஞர் ராஜாஜி நினைவுகளை, எங்களுக்கு அளித்ததற்கு நன்றி.

- ஆர்.ரங்கநாதன், சென்னை

எண்ணம் தருகிறது. அவர் சார்ந்துள்ள இயக்கத்தின்மீது அவர் வைத்துள்ள பற்றும் தெரிகிறது. அவர்களின் இயலாமையும் புரிகிறது.

- உமா சத்தியம், வேலூர்

அருவிக்கரைகளைத் தற்கொலை மேடைகளாக்கிவிட்ட நமக்கு, நயாகரா நீர்வீழ்ச்சியில் தற்கொலை மரணங்களே நிகழ்ந்ததில்லை என்பது இன்ப அதிர்ச்சி!

- எம்.சம்பத், கரூர்

'பொன்னைப் பெண்ணின் கழுத்திலும், பூவை ஆணின் காதிலும் வைத்தான்' என்ற கிரேஸியின் பதிலில் சிரிப்பு!

- எம்.அசோக்ராஜா, திருச்சி

கலாசாரம் என்றாலே கல்கிதான் நினைவில் வரும். 'திருநங்கை கல்கி' விஷயத்திலும் நிருபணமாகியுள்ளது!

- சாந்தி சுந்தர், நெய்வேலி

# எந்தப் படத்துல இந்த டயலாக்?

பத்மபூஷன் நந்தன் நிலேகேனி, 'நான் தேர்தலில் போட்டியிட்டால் டெபாஸிட்கூட கிடைக்காது' எனக் கூறியிருப்பது எவ்வளவு பெரிய வேதனை!

- இனிஹரி, சென்னை

திடீர் ஹீரோ 'கருணாஸ்' 'காமெடியால் கவர்ன்மெண்ட்டை எதிர்ப்பேன்' என்பது, எந்தப் படத்துல பேசின டயலாக்குங்க?!

- அ.யாழினி பர்வதம், சென்னை

'பொம்மலாட்டம்' திரைப்பட விமர்சனம்; வித்தியாசம்.

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

சின்னராஜ் காமிராவால் எழுதிய கவிதை ஒவ்வொன்றும் ஓர் ஓவியம்; சூப்பர்!

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

இல.கணேசன் பதிலளித்துள்ள விதம், அவர் குழப்பவாதியோ என்ற

ரிஷபனின் மினி தொடர், சீட்டாட்டத்தில் வெறி உள்ளவர்களின் நிலையை அப்படியே படம்பிடித்துக் காட்டுகிறது.

- ஜே.துரைராஜ், சென்னை

சினிமா விமர்சனம்



# அபியும் நானும்

மகளை அங்குலம்அங்குலமாக ஆராதிக்கும் ஒரு அப்பாவின் கதை. இதற்கு இயக்குநர் ராதாமோகனின் சினிமா மொழி ஏகத்துக்கும் கைகொடுத்திருக்கிறது. வெட்டுக்குத்து, ஐட்டம் டான்ஸ், ரத்தக் குளியல்... இவை ஏதுமற்ற தமிழ்ச் சினிமா சாத்தியம்தான் என்று 'அபியும் நானும்' மூலம் நிரூபணமாகியிருக்கிறது.

கனிவும் கண்டிப்பும் கலந்த நேர்த்தியான கலவை பிரகாஷ்ராஜ் பாத்திரம். மகளின் முகத்தில் தம் அம்மாவைப் பார்க்கும் அன்பான அப்பாக்களின் பிரதிநிதி. குழந்தைகளின் ஒவ்வொரு 'முதல்'களும் பெற்றோருக்கு சந்தோஷமென்றாலும், அதற்காக பிரகாஷ்ராஜ் காட்டும் எக்ஸ்பிரஷன் கொஞ்சம் அதிகமோ என்று எண்ணத் தோன்றுகிறது. உதாரணம், முதல்முறையாக சைக்கிளில் பள்ளி செல்லும் மகளை (த்ரிஷா) காரில் பின்தொடர்வது. மற்றபடி ஒரு சராசரி தந்தைக்குரிய அத்தனை இயல்புகளோடும் படம் முழுக்க வியாபிக்கிறார் பிரகாஷ்ராஜ்.

வயதுக்குக் குறைந்த ஸ்கூல் பெண்ணாக நடிக்கக் கிடைத்த வாய்ப்புக்காக த்ரிஷா சந்தோஷப்படலாம். புதுமுகம் கணேஷுக்கு இனி தமிழ்ப் படங்களில் அமெரிக்க மாப்பிள்ளை, வீட்டோடு மாப்பிள்ளை, கதாநாயகன் தோழன்... என வாய்ப்பு வந்தால் தவிர்ப்பது நலம்.

ஐஸ்வர்யா, பிராக்டிகலாக யோசிக்கும் பெண்மணி கதாபாத்திரத்தில் பொருந்துகிறார். யாருங்க அந்தக் குண்டு சர்தார்ஜி? அவரின் பங்கார டான்ஸால் திரையே ஆடுகிறது. நமக்கும் சிரிப்பால் மனசு ஆடுகிறது. ஆனால் அவருடைய பின்னணி தெரியவருகையில் கண்கள் பனிக்கின்றன.

த்ரிஷாவின் மூலம் கணேஷின் பாத்திரத்தை விவரிப்பதும், அப்போது அவரின் உயரம் கூடுவதும் இயக்குநரின் டச். கதைநிகழும் மலைப் பிரதேசம் போலவே வசனங்களில் நையாண்டி கலந்த 'குளுகுளு'. தந்தை மகள் பாசம் என்றவுடன், படம் மெதுவாகச் சென்றால், பரவாயில்லையென இயக்குநர் நினைத்துவிட்டாரோ என்னவோ தெரியவில்லை. படம் அவ்ளோ ஃஸ்லோ.

ஆனால் கண்டிப்பாக தந்தையும் மகளும் இணைந்து பார்க்க வேண்டிய படம்.

இயக்குநர் ராதா மோகனுக்கு, 'அபியும் நானும்' இன்னொரு 'மொழி'.

- மகிமைராஜன்

■ கே.எல்.சுரேஷ் ■



# ரஜினி வீட்டில் எம்.ஜி.ஆர். தட்டு!

கோவூர் போர்டைத் தாண்டிப் போய் நின்ற சென்னை மாநகராட்சி பேருந்திலிருந்து இடித்துக்கொண்டு தரையிறங்கிய லதா, புடைவையை ஒருமுறை சரிப்படுத்திக்கொண்டு சுற்று முற்றும் பார்த்தாள்.

காலைவேளை. பேருந்து நிலையத்துக்கு அருகிலுள்ள பழைய டீக் கடை வாசல்.

''என்னம்மா கொஞ்ச நாளா ஆளையே காணோம்?''

டீ ஆற்றிக்கொண்டே வேணு கேட்டார்.

''இல்லண்ணா. கடையை விட்டுட்டு வர முடியலை.''

''டீ சாப்பிட்டுப் போம்மா.''

''இருக்கட்டுண்ணே. அம்மா காத்திட்டிருக்கும்'' சொல்லிவிட்டு, நடக்கத் துவங்கினாள்.

லதா, எப்பவும் இப்படித்தான். தன் அம்மா தேவகியைப் பார்க்கப் புறப்பட்டுவிட்டால், எதிர்ப்படும் எவரிடமும் சரியாகப் பேச மாட்டாள்.

எப்படிப் பேசுவாள்? வடபழனியிலிருந்து காலை எட்டு மணிக்கு பஸ் பிடித்து, கோவூர் வந்தால் திரும்ப மாலை நான்கு மணிக்குள் வீடு திரும்ப வேண்டும். அப்போதுதான் இரவு நேரம் கணவனோடு சேர்ந்து நடத்தும் கையேந்தி பவனை நடத்த முடியும்.

இதற்காகவே மாதம் ஒருமுறை, தன் கணவனிடம் அம்மாவைப் பார்க்க அனுமதி கேட்பாள். தரவில்லையென்றால், இதைச் சாக்காக வைத்துக்கொண்டு அவனிடம் எதற்கெடுத்தாலும் எரிந்து விழுவாள்.

வரும் வழியில் ஒரு வீட்டின் முன்பு வட்டமாய் சேர் போட்டு சினிமா ஆட்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தொலைவில் சினிமா ஷூட்டிங் வேன் நின்றது.

இதைப் பார்த்ததும் லதாவுக்கு 'பக்'கென்றிருந்தது. ஒருவேளை நம் வீட்டிலும் ஷூட்டிங் நடந்தால்? நினைத்துப் பார்க்கவே கஷ்டமாக இருந்தது.

கோவூர் மற்றும் அதனைச் சுற்றியுள்ள கிராமங்களில் சினிமா ஷூட்டிங்தான் அந்நியச் செலாவணி.

தமிழகத்து கிராமங்களை அச்சுவார்த்தது போல் இருப்பதால், கிராமத்தைக் கதைக்களமாய்க் கொண்டு படம் எடுக்கும் படைப்பாளிகளின் புண்ணிய பூமி.

''அதோ பார்றா... எம்.ஜி.ஆர். சாப்பிடுறாரே தட்டு. அது எங்க வீட்ல ஷூட்டிங் நடந்தப்ப நாங்க கொடுத்த தட்டுத்தான்'' என டி.வி.யில் மாட்டுக்கார வேலன் படம் பார்க்கும் போதெல்லாம் கோவூரில் ஒருத்தர் சொல்வார். ஒரு படத்தில் ரஜினி குடியிருப்பதே என் வீட்டில்தான் என்றும் பார்ப்பவரிடமெல்லாம் சொல்வார்.

இங்கே சண்முகம் ஆசாரி ஷூட்டிங்

ஹவுஸ் என்றால் கோடம்பாக்கத்தில் ஏக பிரபல்யம்.

அது வேறு யாரின் வீடுமல்ல. லதாவின் வீடுதான். வீட்டு வாசலில் இருபுறமும் பெரிய திண்ணைகள். உள்ளே நுழைந்தால் வலப்பக்கம் ஓர் அறை. இடப்பக்கம் ஓர் அறை எதிரே பெரிய முற்றம். முற்றத்தைத் தாண்டி அந்தப் பக்கம் ஒரு அறை. அதற்குப் பின்னால்



கொல்லை வாசல் கதவு. நீண்ட கொல்லை.

லதாவின் அப்பாவுக்கு வந்த சில வேண்டாத சகவாசங்களால், இந்த வீட்டை விற்றுக் கடன்களை அடைத்தார்.

வீட்டை வாங்கிய நுங்கம்பாக்கம் மோகன், ''நீங்கள் வாடகை எதுவும் தர வேண்டாம். இந்த வீட்டுக்குப் பாதுகாப்பாய் இருந்துகொண்டு ஷூட்டிங் நடத்த வருபவர்கள் வீட்டைப் பழுதாக்கி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்'' என சொல்லிவிட்டுப் போனார்.

இந்த வேலையைத்தான் சண்முகம் ஆசாரி ரொம்ப நாள் பார்த்தார். ஒருநாள் இறந்து போனார். அப்போது லதாவுக்கு வயது எட்டு.

அதன் பிறகு படிக்காத பெண்கள் செய்யும் அத்தனை வேலைகளையும் பார்த்து, தேவகி அம்மாள்தான் மகளை வளர்த்தாள்.

காலம் லதாவின் பருவத்தை மாற்றிய பின்னால், தேவகி அம்மாளின் அண்ணன் முறையுள்ள தூரத்து உறவினர் ஒருவர், ஒன்றுக்கும் உதவாத தன் மகனுக்கு ஜாதகம் பார்க்கப் போக, ஜோசியர், ''மனைவியால் யோகம் பெறும் ஜாதகம். கல்யாணமானா வேலைக்குப் போய்விடுவான்'' எனச் சொல்லிவிட்டார். யாரும் பெண் தராத நிலையில் தேவகி அம்மாளின் வறுமை லதாவைத் தந்தது.

ஜோஸியர் சொன்னது உண்மைதான். லதா திருமணம் ஆனதும் இட்லிக் கடை ஆரம்பித்தான். இப்போது யாருமற்று தனியே இருக்கும் அம்மாவின் நினைப்பு வரும்போதெல்லாம், அவளையும் அறியாமல் கண்கலங்கும். அம்மாதான் எதற்கும் அழமாட்டாள்.

தூரத்தே வரும்போதே தன் வீட்டு வாசலிலும் சினிமா ஷூட்டிங் வேன் நிற்பதைப் பார்த்ததும் லதாவுக்குப் பகீரென்றது.

நினைத்தது போலவே நடந்துவிட்டது. ஒரே எட்டில் வீட்டு வாசலுக்கு வந்துவிட்டவள், வீட்டிற்குள்ளிருந்து அவசரமாய் வெளியே வந்த புரொடக்‌ஷன் பாயிடம் கேட்டாள்.

''என்னா படமா?''

''இல்லம்மா. தோழி சீரியல்.''

நிலைவாசற்படி தாண்டி உள்ளே போக முடியவில்லை. உள்ளே டைரக்டர் ஒரு சேர் போட்டு முதுகு காட்டி அமர்ந்திருந்தார். எதிரே ஒரு ஸ்டூலில் வீடியோ மானிட்டர் இருந்தது.

கேமராவுக்கு எதிரே நிற்கும் பெண்ணுக்கு ஒரு நாற்பத்தைந்து ஐம்பது வயதிருக்கும். பக்கத்தில் நின்ற பெண்ணுக்கு ஒரு இருபது வயதிருக்கும். உடையில் ஏழ்மை தெரிந்தது.

லதா வீட்டுக்குள் நுழையலாமென்றால்



''யோவ்... ஹீரோ தப்பிச்சுப் போக குதிரை கொண்டு வரச் சொன்னா கழுதையைக் கொண்டு வந்திருக்கே...!''

''குதிரையைவிட கழுதைதான் சார் நல்லா 'பொதி' சுமக்கும்.''

- உத்தமபுத்திரன்

''நீங்க அரசியலுக்கு வந்து, ஆட்சியைப் பிடிக்க ஏன் ரொம்ப ஆர்வமா இருக்கீங்க...?''

''எதுலயாவது வருமானம் வந்துகிட்டே இருக்கணும். அதுவும் குறைந்தது ரெண்டு, மூணு மாவட்டத்தையாவது என் பெயருக்கு எழுதிக்கணும்.''

- உத்தமபுத்திரன்



எதிரே இயக்குநர் உட்கார்ந்திருந்தார். ஷூட்டிங் நடுமுற்றத்தில் நடந்தது. அதைத் தாண்டித்தான் அம்மாவின் அறைக்குச் செல்ல வேண்டும்.

லைட் மேல் கொஞ்சம் இடித்தாலும் எப்படிக் கத்துவார்கள் என்பது தெரியும். டைரக்டர் எழுந்தால், பக்கத்தில் இருக்கும் சின்ன இடைவெளி வழியே உள்ளே சென்றுவிடலாம். பரிதவிப்புடன் நின்றாள்.

லதாவுக்கு ஒரு விஷயம் ஆச்சர்யமாய் இருந்தது.

வழக்கமாய் ஷூட்டிங் நடந்தால்...?

'டேய் தெர்மாகூல ஒழுங்கா புட்றா...'

'அறிவுகெட்ட முண்டம் கட்ற சாய்ச்சு புட்றா'

'...த்தா கேமரா கட் சொன்னா லைட்லை உடனே ஆஃப் பண்ண மாட்டியா?' என ஆளாளுக்குக் கத்துவார்கள்.

இந்த ஷூட்டிங்கைப் பார்த்தவுடன் டைரக்டர் மேல் மரியாதை வந்தது. ஏன் எதற்கெடுத்தாலும் கத்தவேண்டும். இது எவ்ளோ நல்லாயிருக்கு? என சந்தோஷமாய் ஷூட்டிங்கைப் பார்த்தாள். கொல்லைப்புறத்திலிருந்து குருவி சப்தம் தெளிவாய்க் கேட்டது.

''என்னப்பா ரெடியா?'' டைரக்டர் திரும்பி கேமராமேனிடம் கேட்டார்.

''ரெடி சார்'' - கேமராமேன்.

''ஒரு மானிட்டர் பார்த்துக்கலாம்'' - டைரக்டர்.

''என்னம்மா இப்ப கரெக்டா பண்ணிடுவியா?''

''சார், ஒரு நிமிஷம்'' எனச் சொன்ன நாற்பத்தைந்து வயதுப் பெண்மணி, கிளிசரினை கீழ் இமையில் லாகவமாய் வைத்துக்கொண்டு, ''ரெடி சார்'' என்றாள்.

டைரக்டர் 'ஆக்ஷன்' எனச் சொல்ல இருபது வயதுப் பெண் சட்டென வயதான பெண்மணியின் காலில் விழுந்து கதறினாள்.

''அம்மா, என்னைய மன்னிச்சுடு. நான் தெரியாம தப்புப் பண்ணிட்டேன்'' எனக் கத்த,

''கட்... கட்'' தலையில் அடித்துக் கொண்டு டைரக்டர் எழுந்தார்.

''ஏம்மா ரெண்டு வருஷம் கழிச்சு உம் பொண்ணைப் பார்க்கிறே... முகத்துல கொஞ்சமாவது எக்ஸ்பிரஷன் வேணாம்?''

''அதான் அழுதேனே சார்...''

''கிளிசரின் போட்டு அழுதா போதுமா? அதுக்கான எக்ஸ்பிரஷன் வேண்டாம்?'' என்றபடியே டைரக்டர் அந்தப் பெண்மணியிடம் செல்ல, அவசரமாய் லதா

மானிட்டர் ஓரமாய் இருந்த இடைவெளியில், புகுந்து மெல்ல லைட்டுகளின் மேல் பட்டுவிடாமல் நடந்து, பின்னால் இருக்கும் அம்மாவின் அறைக்குள் நுழைந்தாள்.

அங்கே முதுகைக் காட்டியபடி அமர்ந்து, அடுப்பிலிருந்து ஒரு சட்டியைப் பிடி துணியால் பிடித்து எடுத்துத் தரையில் வைத்துவிட்டு நிமிர்ந்து பார்த்தாள் அம்மா.

எதிரே லதா.

''வாம்மா'' என்றவாறே பிடிதுணியைத் தரையில் போட்டாள்.

''என்னாச்சும்மா ஏன் ஒரு மாதிரியா இருக்கே... உடம்புக்கு முடியலையா?''

கையிலிருந்த சரவணா ஸ்டோர்ஸ் சப்தத்துடன் கீழே விழுந்தது.

''சைலன்ஸ்'' என டைரக்டர் கத்த கையில் நோட்டுடன் ஒருவன் ஓடிவந்து சொன்னான்.

''ஏம்மா பேசாதீங்கம்மா. டேக் போயிட்டிருக்குல்ல.''

அம்மா, சைகையால் தனக்கு ஏதுமில்லை எனச் சொன்னாள். லதாவுக்குக் கண்கலங்கியது. சட்டென அம்மாவின் அருகில் போய் கழுத்தைத் தொட்டுப் பார்த்தாள்.

அம்மா ரகசியக் குரலில் சொன்னாள். ''ஷூட்டிங்குக்கு வேணுமா... அதான்.''

''உனக்கு ஏம்மா இந்த வேலையெல்லாம். கூப்பிட்டாலும் வரமாட்டேங்குற'' கொஞ்சம் சப்தமாகவே பதற்றத்துடன் கேட்டாள்.

''ஏம்மா ஒரு தடவைச் சொன்னா கேட்கமாட்டீங்களா? டேக் போயிட்டிருக்குன்னு சொல்றோம்ல'' மறுபடியும் சகுனி வந்தான்.

லதாவுக்கு ஆத்திரம் தொண்டையைக் கரித்தது. 'என் வீட்ல வந்து நின்னுக்கிட்டு என்னய பேசக்கூடாதுன்னு சொல்ல நீ யார்றா நாயே?' என இழுத்து வைத்து அறையவேண்டும் போலிருந்தது. எச்சில் விழுங்கினாள். கண்ணில் நீர் கட்டியது. உதடு கடித்து ஆத்திரம் அடக்கினாள்.

**தேவகி அம்மாள் ரொம்ப நாள் கழித்து வந்த மகளிடம் என்னன்னமோ கேட்க நினைத்தாள்; முடியவில்லை. மகள் லதாவுக்கும் கண் கலங்கியது!**



வெளியே டைரக்டர், ''நடிக்கத் தெரியாம வந்து ஏன் என் உயிரை எடுக்கறீங்க? ரொம்ப நாள் கழிச்சுப் பொண்ணு சீரழிஞ்சு போயி வந்திருக்கா. வெறுமனே அழுதா போதுமா? எத்தனை தடவைம்மா கிளிப்புள்ளைக்கு சொல்றா மாதிரி சொல்றது, மேக்-அப் பாக்ஸையும், கிளிசரின் டப்பாவையும் மட்டும் மறக்காமத் தூக்கிட்டு வந்துடுங்க. உன் பொண்ணு இப்படி வந்தா என்னா பண்ணுவியோ அத இப்ப பண்ணு.... ஒன்ஸ்மோர்'' எனச் சொல்லிக் கொண்டிருந்தார்.

தேவகி அம்மாள், ரொம்ப நாள் கழித்து வந்த மகளிடம், என்னென்னமோ கேட்க நினைத்தாள். முடியவில்லை. கண்கலங்கியது. லதாவுக்கும்தான். ●

## உலகநாயகன்

**சார்லி சாப்ளின் - அஜயன் பாலா, விகடன் பிரசுரம், 757 அண்ணாசாலை, சென்னை - 2, விலை ரூ.40/-**

உலகத் திரைப்பட வரலாற்றில் நீங்கள் இடம்பெற்ற சார்லி சாப்ளின் வாழ்க்கையைக் கூறும் நூல். சமகாலச் சமூகத்தின் மீதான விமர்சனங்களை எவ்வித அச்சமின்றித் தம் படைப்புகளில வெளிப்படுத்திய கலைஞன், தன் வாழ்வில் சந்தித்த போராட்டங்களையும், தோல்விகளையும் அவற்றால் மனம் தளராது, உலகமே கொண்டாடும் நாயகனாக உயர்ந்ததையும் அபூர்வமான புகைப்படங்களும், அவரது திரைப்படங்கள் குறித்த பின்னணிணைப்பும் தனிச் சிறப்பு. ஆசிரியரின் உழைப்பு தெரிகிறது.




**பெரிய புராணம் - ஒரு புதிய பார்வை - பாரதி. வை. இராமச்சந்திரன், வர்த்தினி பதிப்பகம், 6பி, 30.ஆவது தெரு, நங்கைநல்லூர், சென்னை - 600 061, விலை ரூ.40/-**




சிவனடியார்களின் வரலாற்றைக் கூறும், பன்னிரண்டாம் சைவத் திருமுறையாக விளங்கும் நூல் பெரிய புராணம். அதனை, இன்றைய சமுதாயச் சூழலுக்கும் செயற்பாடுகளுக்கும் பொருந்தும் வகையை நூலின் மூலம் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. எளிமையான நடை வாசகர்களை ஈர்க்கும். பெரிய புராணம் மூலத்தை வாசிப்பதற்கான ஓர் அறிமுகமாகவும் இந்நூல் அமைந்துள்ளது.




**உன்னைவிட அழகானவள் நீ - த. கண்ணன், குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.60/-**

எளிமையான அறுபத்தெட்டு காதல் கவிதைகளின் தொகுப்பு. நூலாசிரியரின் முன்னுரை, வாசகர்கள் தம் பார்வையில் கவிதைகளை அணுகச் சற்றே தடையேற்படுகிறது. கவிதைகள் தெரிவும், நூல் வடிவமைப்பும், மெருகூட்டுகின்றன. ஒவ்வொரு கவிதையை வாசிக்கின்றபோதும் காதலின் மென்மையான பக்கங்கள். வன்மையாக ஊடுருவுகின்றன. கவிதைகளைவிட அழகு அவற்றைத் தொகுத்துத் தந்திருக்கும் விதம்.

- நேயமுகில்

■ ராகவ்குமார் ■

**திரையில் காமெடி செய்து கலாய்க்கும் சந்தானம், நாம் கேட்ட கேள்விகளுக்கு, நவரச பரிமாணத்தில் பதில் அளித்தார்.**



# ''காதலிக்கக் கத்துக்கணும்!''

**சிரிப்பு:**

திருத்தணி அருகே, ஒரு கல்லூரி விழாவில் தலைமையேற்றுப் பேசினேன். பேச ஆரம்பித்து சில மணி நேரங்களாகி யும் மாணவர்கள் ஒருவர் முகத்திலும் ரியாக்ஷன் இல்லை. பிறகுதான் புரிந்தது; மாணவர்கள் அனைவரும் ஆந்திரர்கள் என்பதும், தமிழ் தெரியாது என்பதும். பிரின்ஸிபால் மன்மதன் படத்தின் தெலுங்கு வர்ஷன் பார்த்து, நான் தெலுங்கு நடிகன் என்று நினைத்து, விழாவுக்கு அழைத்ததாகக் கூறினார். வீட்டில் ஒரு வாரமாக ஒரே சிரிப்பு!

**அழுகை :**

ஆந்திராவில் சமீபத்தில் இரண்டு பெண்கள் முகத்தில் ஆசிட் அடிக்கப் பட்டது. நாகரிகமான யுகத்திலும், பெண் கள் மீதான இந்த வன்முறையை நினைத்து என் மனம் அழுகிறது!

**கோபம்:**

போரூர் அருகே குப்பை கொட்டித் துர்நாற்றம் வீசும் ஓரிடத்தில் ஒரு நபர் காலைக் கடன்களைக் கழித்துக்கொண் டிருந்தார். அந்தப் பக்கமாகச் சென்ற நான், ''ஏன்யா இங்க கொட்டிக் கிடக்கிற அசிங்கம் போதாதா? நீ வேற அசிங்கப் படுத்துறியா?'' என்று கோபமாகச் சப்தம் போட்டேன். அதற்கு அந்நபர், ''அடப்

போங்க ஸார். சும்மா காமெடி பண்ணாதீங்க'' என்று என்னையே கலாய்த்தார்.




**ஆச்சர்யம் :**

லண்டன், கனடா போன்ற நாடுகளுக்கு ஷூட்டிங்குக்குச் சென்றேன். அந்நாடுகளின் தூய்மை அற்புதமானது! அதைவிட அற்புதம் என்று நினைப்பது லண்டன் மியூஸியத்தில் வைத்திருக்கும் கமல் ஸார், ரஜினி ஸாரின் மெழுகுச் சிலைகள்.

**அருவருப்பு :**

சமீபத்தில் பெய்த மழையில் ஒருநாள் ஒயின்ஷாப் வாசலில் ஒதுங்கினேன். அங்கே குடிமகன்கள் வாந்தி எடுத்துக்கொண்டும், ஈயும் கொசுவும் மொய்க்கும் தின்பண்டங்களை சைட்டிஷ்ஷாக உள்ளே தள்ளிக்கொண்டும் இருந்தனர். இதுபோன்ற அசுத்தமான சூழலில் இவர்கள் குடிப்பதை எண்ணி அருவருப்படைந்தேன்.

# சந்தானம் நவரசப் பேட்டி



**பயம்:**

ரஜினி ஸாரின், எந்திரன் படத்தில் அவருடன் இணைந்து காமெடி செய்கிறேன். அதை நினைத்தாலே கொஞ்சம் பயமாகத்தான் இருக்கிறது.

**வீரம்:**

மும்பையில் தீவிரவாதிகளின் 'அட்டாக்'கைப் பார்த்து, எனக்குள் வீரம் எட்டிப் பார்த்தது. தீவிரவாதிகளை ஒரு கை பார்க்கிறேன் என்று வீரமாகக் கிளம்பிய என்னை, வீட்டில் இருப்பவர்கள் அடக்கி வைத்தார்கள்.

**சாந்தம்:**

சமீபத்தில், பொள்ளாச்சி, ஆழியாற்றில் அமைந்துள்ள வேதாத்திரி மகரிஷியின் அறிவுத் திருக்கோயிலுக்குச் சென்றேன். மகரிஷியின் சீடனான எனக்கு அந்த ரம்மியமான சூழலும், தியானப் பயிற்சியும் சாந்தத்தை உணர்த்தின. எவ்வளவு விலைகொடுத்தும் சாந்தத்தை வாங்க முடியாது. உணரத்தான் முடியும்.

**காதல்:**

ஸ்கூல் படிக்கும்போது, காதல் அனுபவத்தை உணர்ந்திருக்கிறேன். 'அலைகள் ஓய்வதில்லை' போலத் துவங்கிய என் காதல், 'ஆட்டோகிராஃப்' போல முடிந்துபோனது. காதல் என்பது சினிமாவுக்கு மட்டுமல்ல; வாழ்க்கைக்கும் அவசியம். மனிதர்கள் அனைவருமே கண்டிப்பாக ஒருமுறையேனும் காதலிக்கணும்! ●



''இப்போ எங்கே வேலை செய்றே பிரகாஷ்?''
''நடிகைகிட்ட....''
''என்ன வேலை...?''
''கணவனா இருக்கேன்.''



''என்னதான் பட்ஜெட் படமா இருந்தாலும் இப்படி பண்ணக்கூடாது.''
''என்னாச்சு?''
''மதியம் சாப்பாட்டுக்குப் பதிலா கூழ் ஊத்தறாங்க.''



''கவர்ச்சி நடிகை குமுதஸ்ரீக்கு நீதானே துணி தைக்கிறே...?''
''ஆமாம் சார்...''
''விபத்துக்குத் துணை போற உன்னைக் கைது செய்யறேன்.''



''அந்தப் பாம்பு காலைலேர்ந்து ஏன் தலையைத் தூக்கிக்கூட பார்க்க மாட்டேங்குது.''
''எந்திரன்' படம்னு பொய் சொல்லி கொண்டு வந்துட்டாங்களாம்.''




"சந்திராயனைப் பற்றி என்ன நெனைக்கிறீங்க?"

"ஒரு படத்துலயாவது அவர்கூட ஜோடி சேர்ந்து நடிக்கணும்."



# சந்திராயனுக்கு ஜோடி!



"மேக்கப் இல்லாம மக்கள் என்னை ஏத்துக்கமாட்டாங்க சார்."

" பேய் படம்தான். ஒண்ணும் பிரச்னை வராது."



"ஏம்பா... நடிக்க வந்த ஆடு எங்கே?"

"நடிக்க வந்த ஆடா! நான் அறுக்க வந்த ஆடுன்னு நெனச்சு பிரியாணி பண்ணிட்டேன் சார்."

**உத்தமபுத்திரன்**

■ ச.ந. கண்ணன் ■

கிரிக்கெட் நிகழ்ச்சி ஒன்றில் தமிழக வீரர் பத்ரிநாத்தைப் பேட்டி கண்டனர்.

ஒருவருக்காக உங்கள் இடத்தை விட்டுக்கொடுப்பீர்கள் என்றால் யார் அவர்?

'ராகுல் திராவிட்.'

கடவுள் உங்கள் முன்னால் வந்தால் என்ன கேள்வி கேட்பீர்கள்?

'நான் எப்போது என் முதல் டெஸ்ட் மேட்சை ஆடுவேன்?'

சென்னையில் ராகுல் திராவிட் ஆடியதைப் பார்க்கும்போது, பத்ரிநாத் எப்படியோ கடவுளிடமிருந்து தனக்கு வேண்டிய பதிலைப் பெற்றுவிட்டார் என்றுதான் தோன்றியது. ஆனால் 'சுவர்' மொஹலி டெஸ்டில் எழுந்து நின்றுவிட்டது. இந்திய அணி ஆடுகிற ஆட்டத்தைப் பார்க்கும்போது, வருங்காலத்தில் ஒருவருக்கும் இடமளிக்காமல் இந்தப் பதினொரு பேரே நிலைத்து நின்றுவிடுவார்கள் என்று தோன்றுகிறது. பொறுமைக்கு ஓர் உதாரணமாக பத்ரிநாத் திகழ்வார் என்று நம்புவோம்.

செய்தி - சானியா மிர்சாவுக்கு டாக்டர் பட்டம்!

இன்றைய தேதியில் சானியா மிர்சாவை விட சாய்னா நேவால்தான் இந்தியாவின் நெ. 1 வீராங்கனை. உலகின் பத்தாவது சிறந்த வீரராக இருக்கும் சாய்னா, சென்ற வாரம் உலக சூப்பர் சிரிஸ் போட்டியில், அரை இறுதிவரை முன்னேறினார். ஒலிம்பிக்கில் சிறு இடைவெளியில் பதக்கத்தைக் தவறவிட்டார். கிரிக்கெட்டில்கூட (ஐ.சி.சி. தரப்பட்டியலில்) முதல் பத்து இடங்களைப் பிடிப்பதற்குள், இந்திய வீரர்களுக்குத் தாவு தீர்ந்துவிடுகிறது. ஆனால், உலக பேட்மிண்டன் தரவரிசைப் பட்டியலில், இப்போது சாயினாவுக்குப் பத்தாவது இடம். ஊக்குவிக்கப்பட வேண்டியவரும் கௌரவமளிக்கப்பட வேண்டியவரும் அவரே.



* சானியா மிர்சா

# மரடோனாவுக்குப்

இருவாரங்களுக்கு முன்பு கொல்கத்தாவுக்கு விஜயம் செய்திருந்தார், கால்பந்தின் பிதாமகனான மரடோனா. மரடோனா இந்தியா வந்த சமயம், மிகவும் சிக்கலான நேரம். மும்பை தீவிரவாதத் தாக்குதல் நடந்து சில நாட்களே ஆகியிருந்தன. ஆனால், பாதுகாப்பு குறித்து பெரிய பயம் எதுவும் கொள்ளாமல் கொல்கத்தாவுக்கு வந்திறங்கினார். அவரைக் காண சால்ட் லேக் அரங்கத்தில் ஒரு லட்சம் ரசிகர்கள் கூடினார்கள். 'எனக்கு இந்தியாவில் இத்தனை ரசிகர்கள்

இருக்கிறார்கள் என்று தெரியாமல் இருந்து விட்டேனே' என்று பரவ சமடைந்தார் மரடோனா.

ஆனால், மரடோனா வந்து சென்ற பிறகு கொல்கத்தாவில் பிரச்னை கிளம்பி யிருக்கிறது. மரடோனாவின் கொல்கத்தா வருகைக்காக, மாநில அரசு ஒன்றரைக் கோடி ரூபாயை அவருக்கு அளித்து மக் களின் வரிப்பணத்தை வீணடித்துள்ளது என்று பி.ஜே.பி. இப்போது போராட்டம் நடத்திக்கொண்டிருக்கிறது. ஜோதிபாக வின் இல்லத்துக்கு மரடோனா செல்ல வேண்டிய அவசியம் என்ன, திரைமறை வில் என்ன நடந்தது என்று சரமாரியாகக் கேள்விகள் எழுப்பப்பட்டுள்ளன. ஆனால், மாநில அரசு இதை ஒரேயடியாக மறுத் துள்ளது. 'மரடோனாவின் வருகைக்காக அரசாங்கம் அவருக்குப் பணம் எதுவும் வழங்கவில்லை. ஜோதிபாசுவும் பிடல் காஸ்டிரோவும் ஒன்றாக இருக்கும் புகைப் படம் மரடோனாவுக்கு அனுப்பப் பட்டது. பாசு கேஸ்டிரோவின் நண்பன் என்பதால் நான் இந்தியா வரச் சம்மதிக் கிறேன் என்று மரடோனா உடனே இந் தியா வரத் தயாரானார்' என்று விளக்கம் கொடுத்துள்ளது. பின்பு அந்த ஒன்றரைக் கோடி எந்தக் கணக்கு? 'சால்ட் லேக் ஸ்டேடியத்துக்கு மரடோனா வருகை தந்தபோது, அதன் பராமரிப்புப் பணிக் காகவும் விழாவுக்காகவும் மத்திய அரசு ஒன்றரைக் கோடி ரூபாய் வழங்கியது. இதைத்தான் பி.ஜே.பி. குழப்பிக் கொள் கிறது' என்றும் அரசு சார்பாக விளக்க மளிக்கப்பட்டுள்ளது.


* மரடோனா

# பெட்டி கொடுக்கப்பட்டதா?

**தோ**னிக்கு அவருடைய சொந்த ஊரான ராஞ்சியில் ஜனவரி 14-ம் தேதி அன்று கோயில் எழுப்பப்படுகிறது. அந் தளவுக்கு ராஞ்சி ரசிகர்கள் தோனி மீது பைத்தியமாக இருக்கிறார்கள். சமீபத்தில் துப்பாக்கி வைத்துக்கொள்வதற்கான அனு மதிக்காக ஆயுத மேஜிஸ்டிரேட்டிடம் விண்ணப்பித்திருந்தார் தோனி. நடத் தைச் சான்றிதழைச் சமர்ப்பிக்குமாறு அரசு அதிகாரிகள் தோனிக்கு உத்தரவிட் டனர். இதைக் கேள்விப்பட்ட ராஞ்சி ரசிகர்கள், கொதித்துப்போய் உள்ளூர் அரசு அதிகாரிகளின் உருவ பொம்மையை எரித்து கலாட்டா செய்தனர். உடனே, தோனி போன்ற ஒருவருக்கு நடத்தைச் சான்றிதழ் தேவையில்லை என்று சொல்லி, அவருக்கு ஆயுதம் வைத்துக் கொள் வதற்கான அனுமதி வழங் கப்பட்டது.

* தோனி



■ ராதிகா ■

சினிமாவில் நடிப்பது எளிது. நாடகத்தில் நடிப்பது ரொம்பக் கஷ்டமான காரியம். கிட்டத் தட்ட நாடகம் முழுவதும் ஒருவித உஷார்த்தனத்துடனேயே இருக்க வேண்டும். காட்சியில் மற்ற நடிகர்கள் சொதப்பிவிட்டால், அதற்கு ஈடுகொடுக்க வேண்டும். கிட்டத்தட்ட இரண்டு, இரண் டரை மணி நேரத்துக்கு உயிர்ப் போடு இருக்க வேண்டும்.

எப்படிப்பட்ட சூழ்நிலை யாக இருந்தாலும், உடல்நிலை சரியில்லை என்றால்கூட என் தந்தை அசரமாட்டார். காட்சி ஆரம் பிப்பது வரைக்கும் அமைதியாக இருப்பார். பெல் ஒலித்ததும் அவருக்குள் ஒரு மாற்றம் வந்துவிடும். மேடையில் அப்படி ஒரு நடிப்புத் திறனை வெளிப் படுத்துவார்.

# "சாரி குழந்தையைக் காப்பாத்த முடியாது!"

அவர் நடித்த எத்தனையோ நாடகங் களுக்கு அவருடன் நான் போயிருக்கிறேன். அப்பாவின் நாடகங்களில் எனக்கு மிகவும் பிடித்தது 'லஷ்மிகாந்தன்'. அதில் பெண் வேடத்தில் நடித்திருப்பார். நகைச்சுவை யில் அரங்கே அதிரும். அதே போல அவரு டைய 'தூக்கு மேடை'யும் எனக்கு ரொம் பப் பிடிக்கும்.

அப்பா ஒருமுறை என்னை மதுரைக்கு அழைத்துப் போனார். நான் சிறு பெண். வெகுதூரம் ரயிலில் பயணம் செய்தது அதுதான் முதன்முறை. நான் அவர் கூடவே இருந்தேன். அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தேன். என் தந்தை எப்பேர்ப் பட்ட ஆளுமைமிக்க மனிதர் என்பது எனக்கு அப்போது தெரியவில்லை. அன்

றைக்கு நடந்த விஷயங்களின் முக்கியத் துவம் பின்னாளில்தான் எனக்குப் புரிந்தது.

மதுரையில் இறங்கியதும் நாங்கள் தங்கும் இடத்துக்குச் சென்றோம். அன்று மாலை என் தந்தையின் 'ராமாயணம்' நாடகம் அங்கே நடைபெற இருந்தது. உடன் இருந்தவர்கள் அப்பாவுக்கு வழக்கம் போல பேப்பர் படித்துக் காட்டினார்கள். அப்பா நடத்தவிருந்த நாடகத்துக்குத் தடை விதித்திருந்ததாகச் செய்தி வெளியாகி யிருந்தது.

அப்பா ஒரு நிமிடம்கூட யோசிக்க வில்லை. ''ராமாயணம்தானே போடக் கூடாது. டைட்டிலை 'கீமாயணம்'னு மாத்து. என்ன நடந்தாலும் இன்னைக்கி நாம நாடகம் போடறோம்'' என்று சொல்லி விட்டார். சொன்னபடி நாட கத்தை நடத்தியும் விட்டார்.



இது நவீன யுகம். எவ்வளவு பெரிய பிரச்னை வந்தாலும் அதைச் சமாளிப்பதற்கான பல வழிமுறைகள் உள்ள காலம். என்னுடைய தொலைக்காட்சித் தொடரில் ஏதாவது ஒரு பிரச்னை வரும்போது, 'நிச்சயம் இதற்கு ஒரு வழி இருக்கும்' என்று நினைத்துக் கொள்வேன். அதே போல அதைச் சமாளித்தும் விடுவேன். ஆனால், என் தந்தையின் காலம் அப்படி இல்லை. மன தைரியம் இருந்தால் மட்டுமே எதையும் எதிர்கொள்ள முடியும்.

விழுப்புரம் பக்கத்தில் ஏதோ ஓர் ஊர். பெயர் ஞாபகத்தில் இல்லை. என் தந்தையின் நாடகம் நடந்து கொண்டிருந்தது. பார்வையாளர்கள் மத்தியில் கூச்சல், குழப்பம். வாய்த் தகராறு வலுத்து, அடிதடி வரை போகும் போல இருந்தது. அப்பா சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தார். நாடகம் முடிந்தது என்று சொல்லிவிட்டார்.

ஓர் ஆள் எழுந்து கேட்டார் : ''அது எப்படிங்க? நாடகம் ஆரம்பிச்சு முக்கா மணி நேரம்கூட ஆகலை. அதுக்குள்ள முடிஞ்சிடுச்சுங்கறீங்க?''

''நாடகம் முடிஞ்சிடுச்சுன்னா முடிஞ் சிடுச்சு. உன்கிட்ட இவ்ளோ நேரம் நாடகம் நடக்கும்னு நான் சொன்னேனா? இல்ல போஸ்டர்ல போட்டிருக்கேனா? அவ்வளவுதான், கௌம்பு.'' அப்பா இப்படிச் சொன்ன பிறகு யாரும் ஒரு வார்த்தை பேசவில்லை. கூட்டம் கலைந்தது.




நாடகக் கலைஞர்களில் என் தந்தைக்கு வந்த சிக்கல்களைப் போல வேறு யாருக்கும் வந்திருக்குமா என்பது தெரியவில்லை. காட்சியின் போது, எப்போது என்ன நடக்கும் என்று சொல்ல முடியாது. 'ரத்தக் கண்ணீ'ரில் முழு நாடகத்துக்கு என் தந்தை இருக்கமாட்டார். 'தொடாதது தொடாமலே போகட்டும்' என்று ஒரு வசனம் வரும். அது ஆரம் பித்தவுடனேயே நாங்களெல் லாம் காரில் போய் அமர்ந்துவிடுவோம். அந்தக் காட்சி முடித்துவிட்டு அப்பாவும் வந்துவிடுவார். கிளம்பி விடுவோம்.

திண்டுக்கல்லில் ஒருமுறை அந்த நாட

கத்தின்போது அப்பா ஏதோ சொல்லிவிட, பார்வையாளர் கள் பக்கமிருந்து இரண்டு மூன்று பேர் சத்தம் போட ஆரம் பித்து விட்டார்கள். பயங்கரமான தகராறு வரும் போன்ற சூழ் நிலை. அப்பா டிரைவரைக் கூப் பிட்டு, 'பசங்களை எல்லாம் வண்டி யில் ஏத்து!' என் கிறார்.



எனக்கு மட்டும் அப்பாவை விட்டுப் போக மனமே யில்லை. 'முடி யாது!' என்று சொல்லி அழு கிறேன். டிரைவரும் மற்றவர்களும் என்னை இழுத்துப் பார்த்தும் 'வரமாட் டேன்' என்று அடம்பிடித்தேன். அப்பா விடமும் இரண்டு மூன்று பேர் போய்க் கெஞ்சுகிறார்கள். 'பிரச்னை பெரிசாகும் போல இருக்கு. நாடகத்தை முடிச்சிட லாம். வாங்க!' அவர் மறுத்துவிட்டார்.

அன்று அப்பா மேடையை விட்டு இறங்கவில்லை. நாடகத்தையும் நிறுத்த

**“ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்த சரத்குமார், பதறிப்போய் என்னைத் தூக்கிக்கொண்டு ஆஸ்பிட்டலுக்கு ஓடினார்!”**

வில்லை. நாடகத்தில் பயன்படுத்தும் டம்மித் துப்பாக்கி ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டார். 'யார்றா சத்தம் போட்ட வன். தைரியம் இருந்தா மேல வாடா!' என்று துப்பாக்கியை ஆட்டியபடி அழைத்தார். ஒருவரும் மேடைக்கு வர வில்லை.

**எ**ன் தந்தை நடிப்பில் ஏதாவது ஓர் அம்சம் சரியாக வந்துவிட்டால், கடைசி வரை அதைக் கடைப்பிடிப்பார். 'ரத்தக் கண்ணீர்' நாடகத்தில் அவருக்குப் பார்வை போகும் காட்சியில் 'தடால்' என்று கீழே விழுவார். தலை மட்டும் அடிபடாமல் பார்த்துக் கொள்வார். முதல் முறை எப்படி இடது பக்கம் விழுந்தாரோ, அதைக் கடைசிவரை அவர் மாற்றவே இல்லை.

'**அ**ண்ணாமலை' தொடரில் கொஞ்ச நஞ்சப் பிரச்னை இல்லை. எப்படியோ சமாளித்து ஓடிக்கொண்டிருந்தேன். இடை யில் பிரம்மாண்டமான பிரச்னை ஒன்று வந்து சேர்ந்தது. எதற்கும் அசராத நானே அது வந்தபோது துவண்டுபோனேன்.

அப்போது நான் கர்ப்பமாக இருந்தேன். ஒரு காட்சியில், நடிக்கும்போது தவறிக் கீழே விழுந்துவிட்டேன். யூனிட்டில் இருந்தவர்கள், என் கணவர் சரத்குமாருக் குத் தகவல் கொடுத்தார்கள். என்னை மருத்துவமனைக்குக் கொண்டு போனார் கள். பரிசோதித்த டாக்டர்கள் சொன்னார் கள்: 'ஸாரி! குழந்தையைக் காப்பாற்ற முடியாது. இன்னொரு விஷயம் நீங்கள் இனிமேல் நடக்கக்கூடாது.'

*(ரயில் வரும்)*

எழுத்தாக்கம் : **பாலுசத்யா**



# அருள்வாக்கு



# கோபம்

நமக்கு அநேக சந்தர்ப்பங்களில் கோபம் வருகிறது. முக்கியமாக இரண்டு விதங்களில் கோபம் உண்டாகிறது. ஒருவன் ஒரு தப்புக் காரியம் செய்தால் அவனிடம் கோபம் ஏற்படுகிறது. அல்லது ஒருவன் நம்மைத் தூஷித்தால் அவனிடம் கோபம் வருகிறது. யோசித்துப் பார்த்தால் இந்த இரண்டு விதங்களிலும் எவரிடமும் கோபம் கொள்வதற்கு நமக்கு யோக்யதை இல்லை என்று தெரியும்.

ஒருவன் தப்புப் பண்ணுகிறான் என்றால் கோபம் கொள்கிறோமே, அப்படியானால் நாம் தப்புப் பண்ணாதவர்களா? ஒருவனைப் பாபி என்று நாம் துவேஷிக்கும்போது, நாம் அந்தப் பாபத்தைப் பண்ணாதவர்தானா என்று நினைத்துப் பார்க்க வேண்டும். காரியத்தில் பண்ணாவிட்டாலும் மனசால் பண்ணியிருப்போம். நாம் அநேக தப்புக்களை, பாபங்களைப் பண்ணிக் கொண்டேதான் இருக்கிறோம். நம்மை விடத் தப்பும் பாபமும் பண்ணுகிறவர்கள் இருக்கலாம். நம் மனசு ஏதோ ஓர் அளவுக்குப் பக்குவம் அடைந்திருப்பதால் நாம் இந்த அளவு பாபத்தோடு நிற்கிறோம். அவனுடைய மனசுக்கு இந்தப் பக்குவம்கூட வராததால் இன்னும் பெரிய பாபம் பண்ணுகிறான். நாம் செய்கிற தவறுகளைத் திருத்திக் கொள்வதற்கு எத்தனை பாடுபட வேண்டியிருக்கிறது? நம்மையும் விட மோசமான நிலைக்கு இறங்கிப் பாபங்களை செய்யப் பழகிவிட்ட இன்னொருத்தனின் மனசுக்கும், அதிலிருந்து மீளுவது சிரமமான காரியம் தான். அப்படிப்பட்டவனோடு நாம் சேர்ந்திருக்க வேண்டும் என்பதில்லை. அஸத் ஸங்கத்தைவிட்டு ஸத்ஸங்கத்தில் சேர்வதுதான் ஆத்மாபிவிருத்திக்கு முதல் படி என்று சகல சாஸ்திரங்களும் சொல்கின்றன. ஆனால், பாபிகளை நாம் வெறுப்பதிலும் அவர்களைக் கோபிப்பதிலும் பயனில்லை. அவர்களுடைய மனசும் நல்ல வழியில் திரும்ப வேண்டும் என்று பிரார்த்திப்பதொன்றே நாம் செய்ய வேண்டியது. ஈசுவரானுக்கிரகத்தில் நம்மில் யாருக்காவது அநுக்கிரக சக்தி கிடைத்திருந்தால், அதை இந்தப் பாவிகள் கரையேறுவதற்கே உபயோகிக்க வேண்டும்.

– ஜகத்குரு காஞ்சிகாமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



* 'வால்கைரி' படத்தில்

# "ஹிட்லரைக் கொல்ல நினைத்தேன்!"

## -டாம் குரூஸ்

பிப்ரவரியில் உலகெங்கும் திரையில் முகம்காட்டவிருக்கிறார் 'சே'.

கேன்ஸ் உள்ளிட்ட, உலகப் பிரசித்தி பெற்ற திரைப்பட விழாக்களிலெல்லாம் விருதுகளை வாங்கி குவித்துக் கொண்டிருக்கும் ஸ்டீபன் ஸோடர்பெர்க், இந்தப் படத்தை இயக்கியிருக்கிறார். அவர் ஓர் அமெரிக்கர் என்பதுதான் ஆச்சர்யம்.

கியூபாவின் ஹவானா நகரில் நடந்த திரைப்படவிழாவில் 'சே' முதன்முதலாகத் திரையிடப்பட்டிருக்கிறது. படத்தின் முதல் பாகம் கியூபப் புரட்சியைப் பற்றியது. இரண்டாம் பாகம் பொலிவியாவில் அவர் கொலை செய்யப்பட்டதைப் பற்றியது. இரண்டாம் பாகத்தை, பொலிவியா நாட்டிலேயே படம் பிடித்திருக்கிறார்கள். கியூபாவின்மீது அமெரிக்கா விதித்திருக்கும் தடைகளின் காரணமாக, கியூபக் காட்சிகள் மட்டும் ஸ்பெயின் நாட்டில் படமாக்கப்பட்டிருக்கிறது.

ஒபாமாவின் மீது உலகெங்கும் ஒரு சிநேக நம்பிக்கை உருவாகிவருகிறது. தடைகள் தளர்த்தப்படுமென்று கியூபாவும் எதிர்பார்க்கலாமா?

கலைஞன் என்ற அளவில் ஸோடர்பெர்க் தன் கடமையைச் செய்துவிட்டார். ஆட்சியாளர் என்ற முறையில் ஒபாமா என்ன செய்யப் போகிறார்?

டெய்ல்பீஸ் : அங்கீகரிப்பு மாநாடு ஒன்றுக்காக சென்னை அண்ணா நகர் ஆர்ச் அருகே, பிரம்மாண்டமான வினைல் பேனர். ஆவேசமாக உரையாற்றும் தலைவரின் பின்னணியில் 'சே'வின் படம். கண்களை உறுத்த, உற்றுப் பார்த்தால் அது சேகுவேராவின் படமல்ல; பெனிசியோ டெல் டோராவின் படம். அடப்பாவிகளா!

■ எஸ்.சந்திரமௌலி ■

'வாரணம் ஆயிரம்' படத்துக்குப் பிறகு, 'அயன்' படத்தைப் பெரிதும் எதிர்பார்க்கிறார் சூர்யா. ஏவி.எம். ஸ்டூடியோவில் ஷூட்டிங் ஸ்பாட்டில் இருந்தவரை, லஞ்ச் பிரேக்கில் மடக்கிப் பிடித்தோம்...

**'அயன்' அதிரடி ஆக்ஷன் ஆசாமியா?**

"டைரக்டர் வஸந்த், என்னை அறிமுகப்படுத்தின நேருக்கு நேர் படத்தோட கேமராமேன் கே.வி.ஆனந்த். ஒரு புதுமுகமா, தாழ்வுமனப்பான்மையோட இருந்த என்னிடம், ஒரு கேமராமேனாக இல்லாமல், அண்ணன் மாதிரிப் பழகினவர். 'நீ ஒரு ஹீரோ! தைரியமா இரு; வெட்கப்படாதே! கால் மேல கால் போட்டு உட்கார்' என்று தைரியம் கொடுத்தவர். அவர் எடுத்த ஃபோட்டோக்களில்தான் தமிழ் ரசிகர்கள் என்னை அடையாளம் கண்டுக்கிட்டாங்க. அவர் முதல் படம் 'கனாக் கண்டேன்' டைரக்ட் பண்ணினப்போ, என்னை நடிக்கும்படி கேட்டார். ஆனால், தேதி ஒத்துவரலை. பிறகு படம் பார்த்தபோது, நல்ல படத்தை மிஸ் பண்ணிட்டோமேன்னு நினைச்சேன். அதுக்கப்புறம் சில விளம்பரங்களில் ஒர்க் பண்ணினோம். அவர் அயன் கதை சொன்னப்போ நான் ரொம்ப இம்ப்ரஸ் ஆயிட்

# அயன் என்றால் அழகன்!



டேன். படம் வரட்டும். பிறகு அழகான பையன்களைப் பார்த்து பெண்கள் 'அயன்'னு கோட்வேர்டு வெச்சுக் கூப்பிடு வாங்க. என்னோட கேரக்டர் அவ்ளோ ஃபிரஷ். அயன் என் சினிமா வாழ்வின் முக்கிய மான படம்.''




**அடுத்த படம்...?**

''முருகதாஸ் டைரக்‌ஷன்ல ஒரு படம் பண்ணும் பிளான் இருக்கு. அதுக்கு முன்னால கே.எஸ். ரவிகுமார் டைரக்‌ஷன்ல ஒரு படம் பண்ணலாம்னு முடிவாயிருக்கு. ரெண்டு, மூணு கதை டிஸ்கஸ் பண்ணினோம். அதுல ஒண்ணு எனக்கும், அவருக்கும் ரொம்பப் பிடிச்சுது. இன்னும் படமும் கமர்ஷியலா நல்லாப் போகுது. இங்கேகூட மூணு ஷிஃப்ட்ல, சிவாஜி சார் மூணு படம் ஒர்க் பண்ணி இருக்கார். ஆனா, என்னால அதுபோல ஒர்க் பண்ண முடியும்னு தோணலை. தைரியம் இல்லை. ஒரு படத்தை ஒத்துக்கொண்டால், அதற்காக எத்தனை நாள் வேண்டுமானாலும் நான் நடிச்சுத் தரத் தயாரா இருக்கேன். ஆறு மாசத்துல முடிக்கலாம்னு திட்டமிட்டிருந்த 'வாரணம் ஆயிரம்' முடிய ஒன்னரை வருஷமாயிடுச்சே. என் கவலை எல்லாம், கையில் இருக்கிற படத்தைச் சீக்கிரமா முடிச்சு, அடுத்த புரொடியூசரை, டைரக்டரைக் காக்க





டைட்டில் முடிவாகலை. ஜனவரியில் அதன் ஷூட்டிங் ஆரம்பிக்கும்.''

**ஒரு சமயத்துல உங்களால ஒரு படம்தான் நடிக்க முடியுமா?**

''இந்தியில கொடிகட்டிப் பறக்கிற அக்‌ஷய் குமார் ரெண்டு வருஷத்துல 12 படங்கள் பண்ணி இருக்கார். எல்லாப் வைக்காமல் படத்தை ஆரம்பிக்கணும்.''

**இந்தியில அமிதாப் குடும்பம் மாதிரி இங்கே சிவகுமார் குடும்பமும் சேர்ந்து நடிச்சா நல்லா இருக்குமே?**

''அப்பாவோட சேர்ந்து உறுதிமொழி படம் மட்டும் பண்ணியிருக்கேன். நாங்க நினைச்ச மாதிரி அந்தப் படம் வரலை. நாங்க எல்லாரும் சேர்ந்து நடிக்கிற குடும்பப் படமெல்லாம் வேணாம்னுதான் நினைக்கிறேன். சொல்லப்போனா, எங்



* கே.எஸ். ரவிகுமார்

களைக் 'கலைக் குடும்பம்'ன்னு சொல்றதைக் கூட நாங்க விரும்பலை. ஒவ்வொருத்தருக்கும் தனித்தன்மையும், திறமையும் இருக்கு.''

**இந்தி 'கஜினி'?**

'' 'தாரே ஜமீன் பர்' என்ற அற்புதமான படத்தைக் கொடுத்து, தான் யார் என்று உலகத்துக்கே காட்டினார் அமீர்கான். நான் கஜினி படத்தில் நடித்தபோது, எனக்கு இன்ஸ்பிரேஷனாக இருந்தவர் அமீர்கான். இந்தி கஜினியில் அமீர் நடிக்கிறதே எனக்குப் பெருமைதான். நான் குருவாக நினைக்கிறவரே, என்னிடம், 'நானும் உன் சட்டையைப் போட்டுக்கறேன்: குடுடா' என்று கேட்பது எவ்வளவு பெருமைக்குரிய விஷயம்? எங்க வீட்டுக்கு வந்து, டின்னர் சாப்பிட்டுவிட்டு, ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தபோது, கஜினியில் நான் செய்த மேனரிசங்களை எல்லாம் செய்து காட்டினார். போன வாரம் ஃபோன் செய்து, 'உங்களுக்காக ஒரு ஸ்பெஷல் ஷோ ஏற்பாடு செய்யறேன். படத்தைப் பார்த்திட்டு உங்க அளவுக்கு நடிச்சிருக்கேனான்னு சொல்லுங்க'ன்னு சொன்னார். உங்களுக்கே இதெல்லாம் கொஞ்சம் ஓவரா தெரியலையா?'ன்னு கேட்டேன்.''

**இந்தி சினிமாவுக்குப் போகும் ஐடியா இருக்கா?**

''தமிழ்ப்பட உலகம், எந்தவிதத்திலும் இந்திக்குத் தாழ்ந்தது இல்லை. இந்திப் படங்களில் ஒர்க் பண்ற பெஸ்ட் திறமைசாலிகள் தமிழ்ப்படங்களிலேயும் ஒர்க் பண்றாங்க; இந்தி அளவுக்கு செலவு பண்ணி தமிழ்ப் படங்கள் எடுக்கறாங்க. எனவே இந்திக்குப் போக ஆசை இல்லை; மேலும் எனக்கு இந்தி தெரியாது. இந்தி நல்லா தெரியாம இந்திப் படத்துல நான் நடிக்க மாட்டேன். எனக்குத் தமிழ்நாட்டு மக்களோட பாராட்டே போதும். நாடே என்னைப் புகழணும் என்கிற பேராசை எனக்கு இல்லை.''



* ஏ.ஆர். முருகதாஸ்

**தி.நகர்ல ஒன்பது கிரவுண்டு நிலம் வாங்கினதா நியூஸ் வந்ததே?**

''அப்பா வாடகைக்கு இருந்த வீட்டை, சொந்தமா வாங்கினார். நாங்க அங்கே தான் பிறந்து வளர்ந்தோம். இப்போ நாங்க வளர்ந்து, எங்களுக்குக் குழந்தைகள் வந்தாச்சு. எல்லாருக்கும் தனி ரூம் தேவைப்படுது. அம்மா, பெரிசா தோட்டத்தோட வீடு இருந்தா நல்லா இருக்கும்னு சொன்னாங்க. அதுக்காகத்தான் இடம் வாங்கி இருக்கேன். நாங்க எல்லாரும் ஒண்ணா இருக்க அங்கே பெரிசா வீடு கட்டப் போறோமே தவிர, வேற எந்தப் பிளானும் இல்லை.''

**'நேருக்கு நேர்' சூர்யா- 'அயன்' சூர்யா...?**

* கே.வி.ஆனந்த்



**"நீ ஒரு ஹீரோ! தைரியமாய் இரு; வெட்கப்படாதே; கால் மேல் கால் போட்டு உட்காரு!"**

''என்னுடைய டைரக்டர்கள் எல்லாரும் என் வளர்ச்சிக்கு ரொம்ப உதவியிருக்காங்க. நானும் என் திறமையை முடிஞ்சவரைக்கும் வளர்த்துக்கிட்டிருக்கேன். ஷூட்டிங்ல ரெண்டாவது டேக் போகிறபோது, ஏன் நம்மால முதல் டேக்குல ஓ.கே. வாங்க முடியலை?ன்னு கேள்வி கேட்டுக்கறேன். டான்ஸ் சீன்ல டான்ஸ் மாஸ்டரோட அசிஸ்டென்ட் நல்லா மூவ்மென்ட்ஸ் கொடுத்தா, நாமளும் அதைவிட நல்லா டான்ஸ் ஆடணும்னு தோணுது. நான் எதிர்பார்த்ததைவிட பல மடங்கு அதிகமா எனக்கு இப்போ அங்கீகாரம் கிடைச்சிருக்கு. இதுல ரொம்ப சந்தோஷம்.''

**நடிகர் சிவகுமாரோட மகனா இல்லாமல் இருந்திருந்தால் இவ்வளவு சாதிச்சிருக்க முடியுமா?**

''என்னுடைய திரை உலக நுழைவுக்கு அது ரொம்ப உதவியாக இருந்ததை மறக்கவோ, மறுக்கவோ முடியாது. ஆனால், முதல் ஒன்னு ரெண்டு படங்களோட 'சிவகுமார் மகன்' என்கிற அடையாளம் போயிட்டதாகத்தான் நான் நினைக்கிறேன். மக்கள் என்னை சூர்யா என்ற நடிகனாகத்தான் இப்போ பார்க்கிறார்கள். சிவகுமாரின் மகனாக இருந்தபோதிலும்கூட, சினிமாவுக்கு அறிமுகமாகிறவரை, எனக்கு சினிமா ஆசை இல்லாமல்தான் இருந்தது. சினிமாவுக்கு வராமல் இருந்திருந்தால், வேறு எங்காவது வேலை பார்த்துக்கொண்டு இருந்திருப்பேன். சினிமாவுக்கு வந்த பிறகு, 'இதிலே நமது திறமையை எப்படி வளர்த்துக் கொள்வது? எப்படி எனக்கென ஒரு ஸ்திரமான இடத்தைத் தக்கவைத்துக் கொள்வது?'' என்று யோசிக்க ஆரம்பித்தேன்.''

**சூர்யாவுக்குரிய இடம் எது?**

''சூர்யாவோட படம் என்றால் குடும்பத்தோட போய் ரசித்துப் பார்க்கலாம் என்று ஒரு டிரெண்டு ஏற்பட்டிருக்கு. அது ஒரு நல்ல விஷயம்தானே? புதுப்புது முயற்சிகள் செய்து பார்க்கிறவர் என்ற எதிர்பார்ப்பு இருக்கு. அது எனக்கு டானிக் மாதிரி வேலை செய்யுது.'' ●



**ரிஷபன்**

சீட்டுக் கட்டைப் பிரித்ததும் அப்பாவின் முகம் என்னமாய் விகசிக்கும். புதுக் கட்டு என்றால் ஆசையாய் வாசனை பார்ப்பார்.

கலைத்து இடைசேர்த்து பர்ரென்று அடித்து மீண்டும் குலுக்கி... படங்களும், எண்களும் அவரைத் தங்கள் ஆளுமையில் வைத்திருந்தன.

'ரம்மி ஆடணும்னா இது வேணும்.'

தலையைத் தொட்டுக் காண்பிப்பார்.

சின்ன வயசில் ஒருதரம் உமாவையும், அம்மாவையுமே இழுத்து அமர வைத்து விட்டார்.

''ஒருதரம்... ஒரே ஒருதரம்... வந்து விளையாடிப் பாருங்க.''

அம்மாவுக்கு மனசே இல்லை. உமாவுக்கு அது என்ன என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம்.

''வாம்மா... ஒரு தடவைதானே''

கலைத்து... ஜோக்கர் வெட்டச் சொல்லி... ஆளுக்கு 13 கார்டுகள் பிரித்துப் போட்டார்.

அதற்கு முன்பே விளக்கம் சொல்லியிருந்தார்.

''இது ஏஸ்... இது கிங்... இது க்வீன்... இதுதான் கிளாவர்... டைஸ்... ஆடுதன்... இப்படிச் சேர்த்தா... ஒரு செட்டு...''

முதலில் புரிபடவில்லை. தானே இருதரப்பும் விளையாடிக் காட்டியதும் ஓரளவு புரிந்தது. தானும் சேர்ந்து விளையாடிப் பார்க்க பாதி ரகசியம் வெளிப்பட்டது.

இரவுச் சாப்பாடு முடிந்து வீட்டில் இருந்த அபூர்வம். அப்பாவின் கைகள் பரபரவென்று சீட்டுகளை ஏந்தத் துடித்த தவிப்பு, அம்மாவையும் பெண்ணையுமே உட்கார வைத்துவிட்டது.

அம்மா வெறுப்பாய் அமர்ந்திருந்தாள்.

''எதைப் போடறதுன்னு புரியலைப்பா...''

''எதையோ ஒண்ணு போட்டுத் தொலைடி'' என்றாள் அம்மா.

''ரெண்டு ஆடுதன்... தனியா நிக்குமே... அதைப் போட்டுடாதே...''

அப்பா எப்படிக் கண்டுபிடித்தார்... மூன்று சுற்று முடிந்து நாலாவது சுற்று.

''எப்படிப்பா..?''

தலையைத் தொட்டுக் காண்பித்தார்.

''உங்கம்மாவுக்கு அது வேணும். வேற



# கிங்... க்வீன்... ஜாக்!

கார்டை எறக்கு... செட்டு சேர்ந்தது வேணாம்... மூணு எஸ்... மூணு கிங்னு வச்சிருப்பியே.. அதுல கழட்டு...''

''போப்பா... அப்புறம் எப்படி மறுபடி சேர்க்கறது...''

''உங்கிட்டே ரியல் ரம்மியே இல்லியே...''

''அது எப்படிப்பா தெரியும்?''

மறுபடி வியப்பு.

''உம் மூஞ்சியப் பார்த்தாலே தெரியறது.''

உமாவுக்குச் சந்தேகம் வந்து விட்டது.

அன்றைய ஆட்டத்தில் அம்மாதான் ஜெயித்தாள். கொத்தாய்க் கீழே போட்டு



## மினிதொடர்

எழுந்து போனாள்.

''பாரேன்... அலட்சியத்தை...''

அப்பா எரிச்சலாகிவிட்டார்.

அம்மாவிடம் இரவுப் படுக்கையில் சிலாகித்தபோது, ''வாயை மூடுடி'' என்றாள்.

''எப்படிம்மா..?''

''எனக்கு அதுல வெறி இல்லைடி. எப்பவாவது அமையறதை... எப்பவும் கிடைக்கும்னு தொரத்தறது உங்கப்பா...''

**வீ**ட்டில் அதன் பிறகு அப்பா இவர்களைக் கூப்பிடுவதில்லை. அப்பாவின்

சட்டைப் பை வறட்சியான தினங்களில், தானே மானசீக மாய்ப் பிரித்துப் போடுகிற பாவனையில் அபிநயிப்பார்.

உமா அப்பாவுடன் பேசிப் பார்த்ததில் இன்னமும் இறுகிப்போனார்.

''நீ சின்னப் பொண்ணு. பேசாம போ... எனக்குத் தெரியும்.''

''பொழுதுபோக்கா இருக்க வேண்டிய விஷயம்பா. இப்படி அதுவே வாழ்க்கைன்னு...''

அப்பாவின் கோபம் முகத்தில் தெரிந்தது.

''வாயை மூடிண்டு போடி''

அப்பா கைநீட்டி அறைந்ததில்லை. அன்று அந்த வார்த்தைகள் அறைந்தன. உமாவுக்குச் சலிப்பு வந்துவிட்டது.

'எப்படியோ போகட்டும்.'

கூட்டுக்குள் முடங்கியவளை வெளியே இழுத்தவன் தினகர்.

''எங்கப்பா நல்லவர்தான் தினகர். ஆனா சீட்டாடணுங்கிற வெறியில... அந்த நிமிஷம் என்ன செய்யிறார்ங்கிற... நிதானம் இல்லே.''

தினகரைப் பொறுத்தவரை... ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு ரகம்.

''சொல்லிப் பார், பதற்றப்படாமல். கேட்கவில்லையா... விட்டு விடு.''

''எப்படி முடியும் தினகர்... எப்பவும் இறுக்கம் அப்பிக்கிடக்கிற குகைக்குள் காலடி வைக்கிற மாதிரி, வீட்டுக்குள் போனதும்... வாடிப் போகுது மனசு.''

''மனசுக்கு எல்லாத்தையும் கொண்டு போகாதே... அப்பாவைத் திருத்த முடியலைன்னு நீயும் உங்க அம்மாவும் ஒவ்வொரு நிமிஷத்தையும் ஏன் வீணாக்கணும்... அது உங்க லைஃப்... நீங்க வாழ வேண்டிய நிமிஷங்கள்.''

புத்திக்குப் புரிந்தது. மனசு ஏற்க மறுத்து அடம்பிடித்தது.

''மேல... மேல... நீங்களாவே ஒரு வலை பின்னி முடங்கிப் போறீங்க... உங்க அப்பாவும் அதே போல இன்னொரு வலையில...''

தினகர் நிதானமாய் துளிக்கூட சலிப்பு காட்டாமல் தினசரி சொல்லிச் சொல்லி, அவளைச் சுற்றி நெருக்கமாய்ப் பின்னப் பட்டிருந்த மானசீக வலையை அறுத்து விட்டான்.

அவனுடன் இருக்க நேர்கிற நேரங்களில் தன்னம்பிக்கை துளிர் விட்டுக் கொள்ளும். வீட்டுக்குத் திரும்பியதும் அப்பா இல்லாத வெறுமையும், அம்மாவின் சோக வலையும் அவளையும் முடக்கிப் போடும்.

### காஞ்சிபுரம் டு கோடம்பாக்கம்

'திருநா' படத்தின் ஹீரோ சுபாஷ், டைரக்டர் ரவி.எம்.எஸ்., ஹீரோயின் ஹாசினி... இப்படி எல்லாருமே புதுமுகம். எப்படி வந்தது இந்த ஐடியா? டைரக்டர் ரவியிடம் கேட்டால், '' 'திருநா' படத்தோட தயாரிப்பாளர்க்குத்தான் எல்லா கிரடிட்டும். நான் கதையைச் சொன்னதும் இந்தக் கதைக்குப் புதுமுகம்தான் சரியா இருப்பாங்க. எந்தப் பிரபலமான ஹீரோ ஹீரோயினையும் போட்டா கதை எடுபடாதுன்னு ஆலோசனை சொன்னதே அவர்தான். தயாரிப்பாளரே இவ்வளவு ஊக்கம் கொடுக்கும்போது, நம்ம பங்குக்கு நாம ஏதாவது செஞ்சாகனும்னுதான் முதல்ல ரெடி பண்ணுன

ஸ்கிரிப்டை மறுபடியும் இன்னும் ப்ரஷ்ஷா மாத்தியிருக்கேன். 'சுப்ரமணியபுரம்', 'காதல்' படங்கள் வரிசையில இந்தப் படமும் கண்டிப்பா பேசப்படும்'' என்கிறார்.

''ஹீரோ சுபாஷ், காஞ்சிபுரத்துக்காரர். ஹோட்டல் மேனேஜ்மெண்ட் படித்துவிட்டு, சினிமா மேனேஜ்மெண்ட்டுக்கு வந்தவர்; கூடவே டான்ஸ், ஃபைட்... எல்லாமே கத்துக் கிட்டு வந்திருக்கார். அதனால என்னோட வேலை ஈஸியாயிடுச்சு'' என்று ஹீரோபுராணம் பாடு கிறார். ''ஹீரோயின் ஹாசினி நடித்த படம் ஏற்கெனவே ரிலீஸ் ஆகியிருந்தாலும், திருநா படம் மூலமாதான் அவர் சினிமாவுக் குள் வந்தார். அதனால என்னை 'அறிமுக நாயகி'ன்னே போடுங்கன்னு சொல்லிட் டார்'' என்கிறார் டைரக்டர் ரவி.எம்.எஸ்.

- கண்மணி



★ 'திருநா' படத்தில்...

''யாரு... தினகர்... சொல்லு..?''

அம்மா கேட்டதும் என்னவென்று சொல்ல?

''உனக்கு எப்படித் தெரியும்மா..?''

''பக்கத்து வீட்டுக்கு ஃபோன் பண்ணான். நீ அப்போ இல்லே. ஒரு வாரம் லீவுன்னு சொன்னான்.''

''ஓ...''

''யாருடி அவன்?''

''இருட்டுலயே பிடிவாதமா நிக்க றேன்னு நினைப்ப... வெளிச்சத்தைக் காட்டினவன்மா.''

''புதிர் போடாதே.''

தினகர் கொடுத்த தைரியம் பற்றிச் சொன்னாள்.

''இப்பல்லாம் எதையாவது என்னால ரசிக்க முடியறதுன்னா... அது தினகரால தாம்மா...''

''எந்த ஜாதி..?''

''எதுக்கும்மா?''

''சொல்லேன். பதில் கேள்வி கேட்காம உன்னால பேச முடியாதா?''

உமாவுக்கு முதலில் சிரிப்புத்தான் வந்தது. பாவம், அம்மாவால் சில எல்லை களைத் தாண்டி வர முடியவில்லை.

''மனுஷ ஜாதிம்மா. நட்புக்கு அந்த விவரம் போதும்.''

அம்மா ஏனோ மௌனமாகிவிட்டாள்.

ஒரு கவலையை அலசித் தீர்வு தேடிய மௌனமும் உண்டு. தீர்வு புலப்படாமல் விரக்தியில் வாய் மூடிப் போகும் மௌன மும் உண்டு.

உமாவும் மேலே பேசவில்லை. அம்மா

**"நா**ன் பிறந்து வளர்ந்ததெல்லாம் கேரளாதான். ஆனாலும் எனக்கு தமிழ்ச் சினிமா மீது தீராத காதல். எங்க வீட்டில் எல்லோருமே எனக்கு நேர் எதிர். என்னோட சினிமா கனவை அங்கீகரிக்க அவங்க தயாரா இல்லை. 'எங்களுக்கு விருப்பமான எம்.பி.பி.எஸ். முடி; சினிமாவை அப்புறம் பார்த்துக்கலாம்னு சொன்னாங்க. அவங்களுக்காகத்தான் எம்.பி.பி.எஸ். முடிச்சேன். ஆனால், இன்னும் ஒரு ஊசி கூடப் போட்டதில்லை. சினிமா... சினிமா... சினிமான்னு எனக்கு நாளுக்கு நாள் வெறியேறிக்கிட்டு இருந்தப்பதான் 'அஞ்சாதே' பட வாய்ப்பு. அதற்குப் பிறகுதான் நான் ஹீரோவா நடிக்கும் 'தந 07 அல 4777' பட வாய்ப்பு கிடைச்சது'' என்கிறார் அஜ்மல்.

" 'உன்னாலே உன்னாலே' படத்தைப் பார்த்தபிறகு எனக்கு 'ஜீவா' சாரோட படத்துல நடிக்கணும்னு ஆசை வந்தது. தந07 அல 4777 படத்துல அவர்தான் ஒளிப்பதிவாளர்னு சொன்னதும் கதையைக் கேட்காமலே ஒத்துக்கிட்டேன்.''

'தந07, அல 4777' எம்.ஜி.ஆர்.ரோட கார் நம்பர்னு சொன்னாங்க, அதற்குப் பிறகு படத்தோட வெற்றிக்கு இன்னும் கூடுதலா உழைக்கணும்னு தோணுது'' என்கிறார். இந்தப் படத்தின் இன்னொரு சிறப்பு சிம்ரனும் பசுபதியும் இணைந்து முக்கியமான பாத்திரத்தில் கலக்கி இருக்கின்றனர்!

- கண்மணி



* தந07 அல 4777 படத்தில்...

வைச் சமாதானப்படுத்தவென்று ஏதேதோ பேசிக்கொண்டு போக, அம்மாவின் பயம் தான் அதிகரிக்கும்.

**தி**னகர் ஆனால் இதற்கு முரணாகப் பதில் சொன்னான்.

''உன் அம்மாவைப் பொறுத்தவரை அந்தக் கேள்விகளில் நியாயம் இருக்கு.''

''நியாயம் இருக்கோ இல்லியோ, பயம் இருக்கு அம்மா மனசுல.''

''அப்ப நீ வெளிப்படையா இல்லேன்னு அர்த்தம். உன்னைப் பார்த்து உங்கம்மா எதுக்குப் பயப்படணும்?''

உமா நிதானமாய்ச் சொன்னாள்.

''இது என்னால வர்றதில்லே... எங்கப் பாவால வந்தது. எதிர்பார்ப்பு... ஏமாற்றம் எல்லாத்துக்கும்... அம்மா அவர்கிட்டேதான் கத்துக்கிட்டா.''

சிரிப்போடுதான் சொன்னாள். சொல்லி முடிக்கும்போது மனசு கசந்து வழிந்தது.

தினகர் பேசாமல் இருந்தான்; அவள் தரப்பு வாதத்தின் நியாயம் முழுமையாய்ப் புரிகிறவரை.

மறுபடி மென்மையாய்ச் சொன்னான்.

''பேசு உமா... அம்மா மனசுல கவலை விருட்சமாக விட்டுராதே... தினகர் விஷயமோ... வேறெந்த விஷயமோ... அம்மா ஏத்துக்கணும்னு போராடாம... உன் மனசுல இவ்வளவுதான்னு புரியவைக்கிற மாதிரி... அதுல ஒண்ணும் தப்பில்லே... நாம மனுஷாதான்... பேச்சு சக்தி கடவுள் கொடுத்ததே, அவசியத்துக்கு பேசித்தான் ஆகணும்னு... இல்லேன்னா இன்னொரு ரக மனுஷனா... பேச்சு வராத மாதிரி படைச்சிருக்கலாமே...''

அவன் பேசப் பேச... அதன் தாக்கம் தன்னைப் பாதித்த மாதிரி... அம்மாவுக்கும் தன்னுடைய பேச்சு அவசியம் என்று புரிந்தது உமாவுக்கு; இன்னொன்றும். அதே போலத்தான் அப்பாவுக்குமா..?

(தொடரும்)

# சிலம்பாட்டம்



**கதை :**

அக்ரஹாரத்துப் புள்ளாண்டா கையில அருவாவைத் தூக்கிக் கொடுத்திருக்கிறார் இயக்குநர் எஸ். சரவணன். அக்ரஹாரத்துக்கும் அருவாவுக்கும் என்ன தொடர்பு என்பதே கதையின் அடிநாதம். சிம்பு ஹீரோ என்பதால் அங்கங்கே லாஜிக் மீறும் மேஜிக் அதிகம்.

**ப்ளஸ் :**

✱ சிம்புவின் துள்ளலாட்டம். சினேகாவின் பாந்தமான நடிப்பு

✱ சந்தானம் அண்ட் கோ நிகழ்த்தும் காமெடி திருவிழா

✱ அதிரடி கலக்கலாய் யுவன் ஷங்கர் ராஜாவின் இசை

✱ முதல் பாதியின் ஜாலி கலாட்டா

✱ அச்சு அசலாய் அக்ரஹாரப் பின்னணி

✱ நெல் வயலைக் கொளுத்தும் வில்லன்

✱ இளையராஜாவின் பின்னணிப் பாடல்

**மைனஸ்:**

✱ மாற்றமில்லாத அதே பழைய கதை

✱ வார்த்தைகள் புரியாத பாடல்கள்

✱ லாஜிக் பற்றிக் கவலையில்லாத திரைக்கதை

✱ அல்வா கிண்டும் காட்சி

✱ சந்தானத்தின் இரட்டை அனர்த்த வசனங்கள்

✱ அஷ்டகோணலாய் ஹீரோயின்

✱ சிம்புவைப் பற்றி சிம்புவே எழுதிப் பாடும் பாடல்...

✱ அருவா மீது வைக்கும் நம்பிக்கையை ஆட்கள் மீது வைத்திருக்கலாமே!

✱ சிலம்பாட்டம் - சிம்புவின் அதே பழைய ஆட்டம்

**- கபிலன்**




# "தமிழில்தான்

**1974** ஆம் ஆண்டு பிப்ரவரி. பாண்டிச்சேரியில் ஒரே சமயத்தில் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலிலும், சட்டமன்றத் தேர்தலிலும் அ.தி.மு.க. போட்டியிட்டதால், எம்.ஜி.ஆர். தேர்தல் பிரசாரத்துக்காக புதுச்சேரி சென்றார். அவருக்கு மெய்க்காப்பாளராக நானும் சென்றிருந்தேன். அந்தத் தேர்தலில் அ.தி.மு.க.வும் இந்திய கம்யூனிஸ்ட் கால் உட்பட தொகுதியின் பெரும்பாலான இடங்களில் இந்திராகாந்தியும், பெருந்தலைவர் காமராஜரும் தங்கள் கட்சிக்கு ஆதரவு திரட்டினார்கள். இருப்பினும், பாண்டி தொகுதியின் பெரும்பாலான இடங்களில் பெண்களும், ஆண்களும் உச்சி வெயிலில் வேனில் எம்.ஜி.ஆர். பிரசாரம் செய்வது கண்டு மனம் வருந்தி அவரிடம், ''ஐயா மகராசா ஏன் இந்த வேகாத வெயிலில் கஷ்டப்படுகிறீர்கள். நீங்கள் நல்லபடியாக ஊர் போய்ச் சேருங்கள். எங்கள் வோட்டுக்கள் அனைத்தும் உங்களுக்குத்தான்'' என்று பாசமழை பொழிந்து விட்டனர். கட்சி துவங்கி ஒரு வருடம் நான்கு மாதமே



கட்சியும் கூட்டணி அமைத்துப் போட்டியிட்டன. திண்டுக்கல் தேர்தலைப் போலவே இத்தேர்தலிலும் அ.தி.மு.க. கூட்டணி மத்திய மாநில ஆளும் கட்சிகளை எதிர்த்துக் களம் இறங்கியது. மார்க்சிஸ்ட் கட்சியும் அ.தி.மு.க.வுக்கு எதிராகக் களம் இறங்கியதால் கடும்போட்டி ஏற்பட்டது. இருப்பினும் எம்.ஜி.ஆர் மக்களின் எழுச்சியுடன் வீறுநடை போட்டுக் களம் இறங்கினார். பாண்டி, காரைக்

ஆகியிருந்த நிலையில் சந்தித்த இத்தேர்தலில், ''நாம்தான் நிச்சயம் இங்கு ஆட்சி அமைக்கப் போகிறோம்'' என்று மக்களது எழுச்சியைக் கண்டு உறுதிபட எங்களிடம் கூறினார் எம்.ஜி.ஆர். குறிப்பாக ஏனாம் தொகுதிக்கு நாங்கள் சென்ற போது அங்கு மக்கள் எம்.ஜி.ஆர் மீது கொண்டிருந்த அன்பையும், ஆதரவையும் கண்டு



■ கே.பி.இராமகிருஷ்ணன் ■

எம்.ஜி.ஆரே அசந்துவிட்டார். இத்தனைக்கும் அங்கு அ.தி.மு.க. வேட்பாளர் போட்டியிடவில்லை. அ.தி.மு.க. ஆதரவுடன் சுயேச்சை வேட்பாளரே அங்கு போட்டியிட்டார். இப்பகுதியில் அதிகபட்சமாக மலையாளம் பேசும் மக்கள் உள்ளனர். எம்.ஜி.ஆர் பேச முற்பட்டபோது, பெரும்பாலானவர்கள் எம்.ஜி.ஆரிடம் மலையாளத்தில் பேசுமாறு கேட்டுக் கொண்டனர். அதற்கு எம்.ஜி.ஆர் ''எனக்குத் தெரிந்த ஒரே மொழி தமிழ் மொழி மட்டுமே. நான் வளர்ந்தது, புகழ் பெற்றது, இன்று உங்கள் முன் நிற்பது எல்லாவற்றுக்கும் காரணம் தமிழகம்தான். எனக்குத் தெரியாத ஒரு மொழியில் பேசச் சொன்னால் அது எப்படிச் சாத்தியமாகும். உங்களுக்கு விருப்பம் இருந்தால் நான் பேசும்



# பேசுவேன்!''

தமிழ் மொழியில், என் பேச்சைக் கேளுங்கள். விருப்பம் இல்லாதவர்கள் இங்கிருந்து செல்லலாம்'' என்றவுடன் அனைவரும் வாயடைத்து அமைதியாக எம்.ஜி.ஆர். பேசியதை ரசித்துக் கேட்டனர்.

ஏற்கனவே கூறியபடி அ.தி.மு.க. ஆட்சியை அங்கு நிலைநாட்டினார். கட்சி துவங்கி ஒரு வருடம் நான்கு மாதங்களில் அ.தி.மு.க. ஆட்சியை கூட்டணிக் கட்சிகளின் ஆதரவோடு புதுச்சேரியில் நிலைநிறுத்தியது, எம்.ஜி.ஆரது அரசியல் வரலாற்றில் ஒரு மைல் கல்லாக அமைந்து; தமிழகத்திலும் ஆட்சி அமைக்க வித்திட்டது. எம்.ஜி.ஆரின் ஆசியுடன் எஸ்.ராமசாமி புதுவை மாநில முதல்வராகப் பொறுப்பேற்றார். அதே போல் புதுவை நாடாளுமன்றத் தேர்தலிலும் அ.தி.மு.க. வேட்பாளர் அரவிந்த பாலா பழனூர் வெற்றி பெற்றார். எம்.ஜி.ஆரின் இந்த வெற்றியை, தமிழக மக்கள் மட்டுமன்றி அகில இந்திய அளவிலும் வியந்து பாராட்டினார்கள். கட்சி துவங்கி சுமார் பதினாறு மாதங்களில் ஒரு யூனியன் பிரதேசத்தில் தமது கட்சியின் ஆட்சியை அமைத்தது எம்.ஜி.ஆரது அரசியல் சாதனை பட்டியலில் ஒரு மணிமகுடம்! ○

■ நளினி சம்பத்குமார் ■

Image Institute of Multimedia Arts & Graphic Effectsக்குள் நாம் நுழைந்தபோது, மவுசும் கையுமாக அமர்ந்தபடி, திரையில் காணும் நட்சத்திரங்களுக்கு மேலும் மவுசு சேர்த்துக்கொண்டிருந்தார்கள். ''இந்த 'Visual effects'தான் ஒரு சினிமா வோட நிஜ ஹீரோ, நாடித் துடிப்பு எல்லாமே. சாதாரண சினிமாவை சாதனை சினிமாவா மாத்தற வேலைதான் இந்த visual effects செய்யுது'' என்கிறார் சதீஷ்.

''ஒரு பில்டிங்லேர்ந்து இன்னொரு பில்டிங்குக்கு ஹீரோ, ஹீரோயின் தாவிக் குதிக்கறது; fight போட்டுக்கிட்டே flight விட்டு flight தாவறது; உயரமான கட்ட டத்துலேர்ந்து 'குருவி' படத்துல விஜய் குதிக்கறா மாதிரி நேரா கீழ இருக்குற ட்ராக்கைப் பார்த்து ஹீரோ குதிச்சு ஹீரோயிசத்தைக் காட்றது எல்லாமே ஒரு compositing செய்யற வேலைதான்'' என பில்டப் கொடுத்த கமலக்கண்ணன்,

''நிஜமாவே ஹீரோ ஹாய் ஊய்ன்னு சத்தம் போட்டுக்கிட்டு இப்படி ஏகப் பட்ட ஸ்டண்ட் பண்ணினா வேலைக்கே



ஆகாது'' என்கிறார். ''இதுவாவது பரவாயில்லீங்க, நிறைய படத்துல ஹீரோவும் ஹீரோயினும் பக்கத்துல பக்கத்துல ஷூட்டிங் ஸ்பாட்ல நின்னிருக்கக்கூட மாட்டாங்க. ஆனா சினிமால அவங்க ரெண்டு பேரும் சேர்ந்து சிரிச்சுப் பேசிக்கிட்டு இருக்கிற மாதிரியே மாத்தக்கூடிய மேஜிக் பண்ண முடியும்!'' என ரகசியம் உடைத்தார் ரம்யா.




''எத்தனையோ படத்துல அமிஞ்சிக்கரைல இருக்கிற கதாபாத்திரங்களையே அமெரிக்கால இருக்கற மாதிரி காட்டுற வித்தை எல்லாம் நடந்திருக்கு. குறிப்பா, சொல்லணும்னா விளம்பரப் படங்கள்ல நகைகள், பற்கள், பாத்திரங்கள்னு எல்லாம் எக்ஸ்ட்ரா ஜொலி ஜொலிப்போடு பளபளக்கக் காரணமே நாங்க கொடுக்கற எஃபக்ட்ஸ்தான்...'' என்று நிர்மல் பட்டென்று எஃபக்டைப் போட்டார். பல

டப் போடுங்க!''



போகுதுன்னெல்லாம் விளம்பரம் பண்றது இப்ப ஒரு ஸ்டைலாப் போச்சு. அதுல விளம்பரம் பண்றதுக்காகவே ஃபோட்டோ ஷூட் எல்லாம் எடுக்கற ரேஞ்சுக்கு ஆகிப் போச்சு நம்ம சினிமா... ஆனா இப்படி விளம்பரங்கள்லேயும், பானர்லேயும் சினிமா ட்ரெய்லர்லேயும் காட்டப்படற பல ஸ்டில்கள், படத்துலேயே இடம் பெறாத சோகங்கள் பலவும் நடந்துக்கிட்டுதாங்க வருது'' என ஷோக்காக ஷாக் கொடுத்தார் ஷபீர்.

''ஒரு படம் சூப்பர் ஹிட் ஆகறதுக்கு எத்தனை எத்தனையோ காரணங்கள் இருந்தாலும், அதோட பாட்டுக்கள் கேட்கவும் பார்க்கவும் நல்லா இருப்பது ரொம்ப முக்கியம்'' என சூப்பர் ஹிட் ஃபார்முலா சொன்னார் மோகன். ''ரீமிக்ஸ், ரீ மேக்குங்கற பேர்ல கன்னாபின்னான்னு அழகழகான பாட்டுக்களை எல்லாம் அழ விடறாங்க... இதுல பாதி பாட்டுக்களுக்கு ஆதி மெட்டே ஆங்கிலப் பாட்டுக்கள்லேர்ந்துதான் வருது... அத வேற 'என்னை மாதிரியே இன்னொரு கலைஞரும் சிந்திக்கறார்'ன்னு காப்பி அடிச்ச ட்யூனுக்கு புது விளக்கங்கள்லாம் கொடுத்து சூப்பர் காமடியெல்லாம் நடக்குது'' என மோஷன் ராஜ் சொல்ல மொத்த வகுப்பும் சிரிப்பில் எஃபக்டைப் போட்டனர்.



சமயம் இந்த சினிமா பானர்களையும், ட்ரெய்லர்களையும் பார்த்துட்டு பொது மக்கள் 'அட படம் சூப்பரா இருக்கும் போலிருக்கே'ன்னு ஏமாறுவதைப் பார்த்தா பரிதாபமா இருக்கும். என்னவோ நிச்சயதார்த்த விழா மாதிரி... படத்தோட ஷூட்டிங் தொடங்கியாச்சு; படத்தோட ஷூட்டிங் இன்னிக்குத் தொடங்கப்

படங்கள்: **சம்பத்குமார்**

மகான் ஸ்ரீ காரைச் சித்தரின் அருளாசியுடன்

# மூலிகை மருந்தின் மூலம் ஆரோக்கியமாக வாழுங்கள்

**எங்கள் சிகிச்சைகளின் மூலம்**

- உடலில் உள்ள கொழுப்பு, கெட்டநீர், வாயு (Gas) வெளியேறி உடல் எடை குறைய மூலிகை உணவு, மூலிகை மருந்து கொடுக்கப்படும்.
- ஸ்பேர்ப்பட்ட மூட்டுவலி, பாதஎரிச்சல், முதுகுவலி, இடுப்புவலி மற்றும் அனைத்து வகையான தேய்மானத்திற்கு மூலிகை மருந்து, மூலிகை எண்ணை, "பிளட் சர்குலேஷன்" மிஷின், "ஜெராஜம்" மிஷின் மூலம் சரி செய்யப்படும்.
- சர்க்கரை நோயைக் கட்டுப்படுத்தி, அதன் பக்க விளைவுகளான கிட்னி பிராப்ளம், பெராலிக் அட்டாக், ஹார்ட் அட்டாக் வராமல் பாதுகாக்க, மூலிகை உணவு, மூலிகை மருந்து அளிக்கப்படும்.
- தாய்மார்கள் / மனைவிமார்கள் வருத்தம் அடையச் செய்கிற மகன் / கணவரின் குடி, போதை பழக்கத்தை அற்புதமான மூலிகை மருந்து அளித்து 45 நாட்களில் சரி செய்யப்படும்.
- பெண்களின் மாதவிடாய் கோளாறுகள், மார்பக வளர்ச்சி, கர்ப்பபை கட்டிகள், நீர்க்கட்டிகள் மற்றும் கிட்னி ஸ்டோன், யூரியா, கிரியேட்டின் அளவை குறைத்து ஹீமோகுளோபின் அதிகரிக்க அற்புதமான மூலிகை மருந்து அளிக்கப்படும்.

**ரோஸ்லின் ஹெர்பல் முகம் பேக்**
(முகப்பருக்கள், கரும்புள்ளிகள், கருவளையம், தேமல், டென்ஷன் அறவே நீங்க)

**ஹெர்போ ஆயில், ஹெர்பல் டை பேக்**
(முடி வளர, பொடுகு நீங்க, தலை அரிப்பு, பேன் தொல்லை, இளநரை தவிர்க்க)

Dr. பானுமதியின்
- காரை சித்தரின் கனை வைப்பு
- உச்சி முதல் பாதம் வரை
- 108 சிட்டிகா வைத்தியம் புத்தகங்களுக்கு அணுகவும்

அனைத்து வியாதிகளுக்கான சிகிச்சைக்கு அணுகுங்கள்
டாக்டர் ஆர். பானுமதி
**ஸன்ரைஸ் ஹெர்பல் கிளினிக்**
ப.எண். 15, மன்னார் தெரு, தி.நகர்,
பஸ் ஸ்டாண்டு எதிரில்,
சென்னை - 600 017. போன்: 6534 1646
செல்: 94443 38713, 90031 95545
கோவையில் கிளை உண்டு - 99943 27016
தாம்பரத்தில் கிளை உண்டு.



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷித புண்யஸ்மரண ஸமிதி (Regd.)
**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**
29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : rajavedapatasala@dataone.in, vedagdps@sancharnet.in
Website : www.rajapatasala.in

☎ Off : (0435)
2425948
2401789
Patasala :
2401788
2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 466 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 215 மாணவர்களுக்கு 19 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் கடிதத்தில் தங்கள் போன் (with STD Code)/செல்போன் எண்ணை குறிப்பிடும் படி கேட்டுக்கொள்கிறோம். நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு [பகுதி தொகை] | Rs. 700/- | Rs. 8,000/- |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 2,000/- | Rs. 25,000/- |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs.1,30,000/- |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

**கிருஷ்ண யஜுர் வேத அத்யாபகர்கள் விண்ணப்பிக்கவும்.**

# அழகான ஆழ்வார்!

ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர்களில், ஊர் ஊராகச் சென்று பெருமாளைச் சேவித்து மகிழ்ந்தவர் திருமங்கையாழ்வார். பெருமானின் அர்ச்சாவதாரம் எனப்படும் விக்ரகங்களில் ஈடுபட்டு, தேடித் தேடிச் சென்று மங்களாசாஸனம் செய்வதில் அவருக்குப் பரமானந்தம். வடக்கே இமய மலையிலுள்ள திருப்பிரிதி, திருவதரி ஆகிய திவ்யதேசங்கள் முதல் தெற்கே பாண்டி நாட்டில் உள்ள திருக்கோஷ்டியூர் வரை உள்ள திவ்யதேசங்களின் ஆன்மிக உலாநூல் அவரது பெரிய திருமொழி. அந்தப் புனிதப் பயணத்தின் புண்யவசத்தி னால் அவர் உடல் உரம் ஏறியதுபோல் உள்ளமும் முற்றிக் கனிந்ததோ! பெருமா னின் வடிவழகைத் தேடித் தேடித் தரிசித்த தில் அவரது வடிவழகும் பொலிவு பெற்றதோ! அதனால்தான் பெருமாளின் வடிவழகு மங்களாசாஸனம் பெற்றது போல் இந்த ஆழ்வாரின் வடிவழகும் மணவாள மாமுனிகளால் மங்களாசாஸ னம் செய்யப் பெற்றதோ!

இந்த அபூர்வமான வடிவம் சீர்காழிக்கு அருகிலுள்ள திருநாங்கூர் பதினொரு திருப்பதிகளுள் ஒன்றான திருநகரி என்னும் திவ்யதேசத்தில் சேவை சாதிக்கிறது! இந்த ஆழ்வாரின் வடிவழகை முழுவதுமாக ஈடுபட்டுச் சேவிக்க வேணுமானால் மண வாள மாமுனிகளின் வடிவழகுச் சூர்ணிகையைப் படிக்க வேண்டும். வடி வழகுச் சூர்ணிகையை வார்த்தை வார்த்தை யாக அனுபவிக்க வேணுமானால், ஆழ் வாரின் திவ்ய விக்ரகத்தைச் சேவிக்க வேண்டும். இரண்டிலும் அப்படி ஓர் அழகு!

ஆழ்வார் இங்கு நின்ற கோலத்தில் சேவை சாதிக்கிறார். நெடிதுயர்ந்த மெல்லி தான தேகம். இருகரம் குவித்து பெரு மாளை சேவித்தவண்ணம் நிற்கிறார். ஒருகாலத்தில் எதிரிகளுக்கு எமனாக, பரகாலனாக விளங்கியவரா இவர் என்று வியந்து போகிறோம். இவர் சேவித்த திவ்யதேசத்துப் பெருமான்களின் கருணை யெல்லாம் இவர் முகத்தில் பாய்ந்து தேங்கி நிற்க, கம்பீரமும், எளிமையும், பணிவும், பெருமிதமும், பக்தியின் குழைவும், ஞானத்தின் முதிர்ச்சியும் இவர் வடிவில் ஒருங்கே திரண்டு பொலிகின்றன. இந்த அழகிய திருமேனியில் ஈடுபட்டு மண வாள மாமுனிகள் அருளிச் செய்த வரிகளை நினைவுகூர்வோம்.

இருகரமும் கூப்பித் தொழுதவாறிருக்க, தோள் இடுக்கில் அணைத்தவாறு ஏந்திய வேல். வழிப்பறிக் கள்வனாகவும் வேல் எறிந்து போர் புரியும் மாவீரனாகவும் இருந் தமைக்கு அடையாளம். (திருஞானசம் பந்தரை வாதில் வெற்றிகொண்டதன் அடையாளம் இந்த வேல் என்றும் சொல் வார்கள்). நெற்றியில் திருமண் காப்பு. வெறுமனே பெயருக்குத் தீட்டிய கீற்றல்ல. நன்கு அழுந்திய திருநாமம். பெருமானின் திருநாமம் நெஞ்சில் அழுந்தியதுபோல், நெற்றியில் அணிந்த திருநாமமும் அழுந்தி நிற்கிறது. அவர் திருவதனத்துக்குப் பொலி வூட்டும் திருஅதரத்தைப் பாருங்கள்! அதரங்களின் குவிப்பில் அவர் திருவாய் 'ஓம்' என்ற பிரணவத்தை உச்சரிப்பதாகத் தோன்றவில்லை? அந்தப் பிரணவ மந்

# அழகின் வடிவே... அருளின் வடிவே... 23

## த.கி.நீலகண்டன்

திரத்தை உச்சரிக்கையில் உள்வாங்கிய பிராண வாயுவினால் விடைத்து உயர்ந்த மூக்கு; ஆரவாரமின்றி அமைதியாக அடங்கிக் குளிர்ந்த முகம்; பரந்த விழிகள். பதிந்த நெற்றி; நெறித்த புருவங்கள்; காணும் பொருள் அத்தனையிலும் பெருமானைக் காணும் அற்புதத்தை உணர்த்துகின்றன இந்தப் புருவங்கள். கருள்கருளான குழற்கற்றை; வடிந்த காது





கருணையின் உருவமாய் நிற்கும் இவரா ஒரு காலத்தில் பகைவர்களின் உடல்களைத் தன் வாளால் வெட்டிச் சாய்த்தவர்!

கள்; அவற்றில் அசைந்தாடும் காதுகாப்பு. பெருமாள் உபதேசித்த எட்டெழுத்து மந்திரத்தைக் கூர்ந்து கேட்பதற்காகத் தாழ்ந்த செவி; சரிந்த கழுத்து; வீரலக்ஷண மான அகன்ற மார்பு; திரண்ட தோள்கள்; பணிவினால் தாழ்ந்து நெளிந்த முதுகு; குவிந்த இடை; இடையில் அழுந்தச் சுற்றிய ஆடை; மணிகள் கோத்த அரை ஞாண். மார்பில் மாலை தவழ ''தளிரும் மிளிருமாய் நிற்கின்ற நிலை''. (அதென்ன தளிரும் மிளிரும் ஆக நிற்கின்ற நிலை? தளிர் போன்ற மென்மையும் ஒளிவீசும் முகத்தின் மிளிர்வும் சேர்ந்ததே ''தளிரும் மிளிருமாய்'' என்ற அற்புதமான சொற் கட்டு!). அடைந்தவர்க்கு அருளும் தாளி ணைகள்; மெல்ல ஊன்றிய கணைக்கால் கள்; தாமரை மலர் போல் குளிர்ந்த மலரடி கள். திருத்தண்டையும் வீரக்கழலும் சார்ந் திய திருவடிகள். கேசாதிபாதம் பாதாதி கேசம் தெய்வத்தை வர்ணிக்கும் ஸ்தோத் திரங்களைக் கேட்டிருக்கிறோம். படித்திருக் கிறோம். ஆண்டவனுக்குரிய அந்தஸ்தைப் பெற்று இப்படி ஒரு கேசாதி பாத வர்ண னையைப் பெற்று நிற்கும் அடியவர் வேறு யாரேனும் உண்டா?

**ச**ன்னிதியில் சூழ்ந்த மெல்லிதான இருளில் சன்னமான விளக்கொளியில், பட்டர் செய்யும் தீபாராதனையில் ஆழ் வாரின் வடிவழகை சேவித்துப் பரவச மாகிறோம்! குளிர்ந்த முகம்; குளிர்ந்த கண் கள்; குளிர்ந்த புன்னகை; குளிர்ந்த திருவடி கள். எல்லாமே குளிர்ச்சியாக, கண்ணுக் கும் நெஞ்சுக்கும் இதமாகக் காட்சி தரு கிறார் திருமங்கையாழ்வார். குவிந்த கரமும், மென்மையாக ஊன்றிய பாதங் களும் 'தளிரும் மிளிருமாய்' என்ற அபூர்வச் சொல்லுக்குப் பொருள்விரித்து நிற்கின்றன. கருணையின் உருவமாய் நிற்கும் இவரா ஒருகாலத்தில் பகைவர் களின் உடல்களைத் தன் வாளால் வெட்டிச் சாய்த்தவர்! பணிவின் உறைவிடமாய் நிற்கும் இவரா, ஒருகாலத்தில் ஆணவச் செருக்குடன் அரசனாயிருந்தவர்! இவரா! இவரா! என்று வியந்துகொண்டே இருக் கிறோம். பக்தியின் ரசாயனம் விளைவித்த அற்புதம் இது. இந்த ரசாயனக் கலவையின் ரகசியத்தை அறிந்தவராய் மர்மப் புன்னகை யோடு அருகில் நிற்கிறார் குமுதவல்லி நாச்சியார். திருமங்கை மன்னன் திருமங்கை ஆழ்வாராகக் காரணமாயிருந்த வர். தம்பதி சமேதராய் சேவை சாதிக்கும் ஆழ்வார் இவர் ஒருவரே!

(பெருகும்)


FATHIMAA TRUST

## திரைப்பட விழா - கேரளா

**13**-வது கேரள திரைப்பட விழா (டிச.13 முதல் 19வரை) நடந்து முடிந்திருக்கிறது. ஆண்டுதோறும் அதிகரித்துவரும் பிரதிநிதிகள் கூட்டம். அதிலும் பெரும்பாலும் இளைஞர்கள், யுவதிகள். ஒரே சமயத்தில் பதினொரு தியேட்டர்களில் திரைப்படங்கள் திரையிடப்பட்டன. ஸ்வர்ண சக்கரம், ராஜாதா சக்கரம், ரசிகர் பரிசு என்று பல லட்சங்களை கேரள அரசும் பரிசாக அளித்து வருகிறது. சின்ன மாநிலம். சுற்றுலா போன்ற துறைகளாலே வருமானம் ஈட்டும் மாநிலம். ஆண்டுதோறும் திரைப்பட விழாவை கோலாகலத் திருவிழாவாய்க் கொண்டாடுகிறது. தொடர்ந்து திரைப்படத் துறையினரே ஆட்சி செய்யும் தமிழகத்தில், இப்போதுதான் அந்த முயற்சி அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தென்பட ஆரம்பித்திருக்கிறது. இது ஏன்? கேள்வியைச் சுமந்தபடியேதான் விழாவில் கலந்துகொள்ள வேண்டியிருந்தது.

தினமும் ஊதுபத்தி, கற்பூரம் காட்டி கடையைத் திறப்பதைப் பார்த்திருக்கிறோம். கடை திறந்ததும் துப்பாக்கியை எடுத்து வெளியில் வந்து, நாலைந்துமுறை வானத்தை நோக்கிச் சுட்டு 'போணி'யாக்குவதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? பாகிஸ்தானில் டாரா ஆதம் கேல் என்ற வடகிழக்குப் பகுதியில் பர்மா பஜார் கடைகள் போல துப்பாக்கிகள், ஆயுதங்கள் விற்கும் கடைகள். அதில் நடப்பதுதான் துப்பாக்கி சுட்டு 'போணி' செய்யும் காட்சியாகும். Son of a lion என்ற ஆஸ்திரேலியப் படத்தில் இதுமாதிரி காட்சி. ஆயுதத் துப்பாக்கிக் கடையில் வேலை பார்க்கும் ஒரு பையன் படிக்க ஆசைப்படுகிறான். அப்பா, 'படிப்பு வேண்டாம். துப்பாக்கி வகை வகையாய் செய்து காசு சம்பாதி' என்கிறார்.



✱ சன் ஆஃப் எ லயன்...

பையன் அவரின் பிடியிலிருந்து தப்பித்து விடுகிறான். அப்பா சலித்துப் போய் எல்லா வித முயற்சிகளிலும் தோற்று, படிப்புக்குச் சம்மதிக்கிறார். பள்ளியில் அவனிடம் பையன்கள், 'என்னென்ன துப்பாக்கி உனக்குத் தெரியும்?' என்று கேட்கிறார்கள். பையன் தரும் பட்டியலால் ஆசிரியரே வியந்து போகிறார். ''நான் இதுவரைக்கும் மனுஷனைச் சுட்டதில்லை. உடம்பில் மயிரில்லாத ஒரு சொறி நாயைச் சுட்டிருக்கேன்'' என்கிறான். ஆஸ்திரேலிய இயக்குநரான பெஞ்ஜமின் ஜில்மொஹர் பாகிஸ்தானில் சம்பந்தப்பட்ட இடங்களில் தங்கியிருந்து ஆய்வு செய்து இப்படத்தை எடுத்திருக்கிறார். பாகிஸ்தானின், ஆயுத சப்ளை உற்பத்தியும், ஆயுதக் கடைகளும் அதிர்ச்சி தருகின்றன.




"இந்நாட்டில் நான் பிறந்து வளர்ந்தேன். இந்த நாட்டில் எனது மகள்கள் பிறந்து வளர்கிறார்கள். இங்கே பணம் முதலீடு செய்து பல வருடங்களாய் வியாபாரம் செய்கிறேன்'' என்று பிரேசில் மண்ணை ஒரு கையில் அள்ளிக்கொண்டு வெள்ளைக்காரன் உரிமை கொண்டாடிச் சொல்கிறான். அவனை எதிர்க்கும் பூர்வீக இந்தியக் குடிகளின் தலைவன், அவனுக்குப் பதில் எதுவும் சொல்லாமல் கீழே குனிந்து ஒரு பிடி மண்ணை எடுத்து வாயில் போட்டுச் சுவைக்கிறான். Bird watching என்ற பிரேசில் படத்தில் இது இடம் பெறுகிறது. தங்கள் மண்ணை இழக்காமல் போராட நினைக்கும் ஆதிவாசிகள், பழங்குடிகள் உலகம் முழுவதும் நிறைந்திருக்கிறார்கள். லத்தீன் அமெரிக்கப் படங்களாய் பிரேசில், மெக்ஸிகோ படங்கள் இன்று உலகத் தரத்தில் முன்னணியானவை.

# இதுவரை மனிதனைச் சுட்டதில்லை!



* 'காஞ்சீவரம்' படத்தில் பிரகாஷ்ராஜ்

உலகத் திரைப்படங்களில் ஐம்பது சதவிகிதத்துக்கு மேல் இலக்கியப் படைப்புகளாக நாவல்கள், சிறுகதைகளை வைத்து படங்கள் தற்போது வெளிவருகின்றன. நோபல் பரிசுபெற்ற ஜோஸ் சரமாகோவின் நாவலை அடிப்படையாக வைத்து, வெளிவந்துள்ள கனடா படம் 'Blindness' அதிர்ச்சி தருகிறது. ஒரு கண் மருத்துவர் காலையில் எழுந்ததும் கண் தெரியாமல் போகவே அதிர்ச்சியாகிறார். நேற்றிரவுதான் ஒரு கண் தெரியாத நோயாளிக்கு வைத்தியம் பார்த்தவர். கண் தெரியாதவர்கள் மருத்துவமனையில் குவிகிறார்கள். பிறருக்குப் பரவும் என்று தனியே அடைத்து வைக்கிறார்கள். சாப்பாடு திண்டாட்டம். அதிலும் தாதாவாகும் ஒருவன். யாரை யார் வேண்டுமானாலும் அடித்துக் கொள்ளலாம். பார்வையற்றவள் என்று உள்ளே



■ சுப்ரபாரதிமணியன் ■






தங்கும் மருத்துவரின் மனைவி இவற்றையெல்லாம் பார்த்துச் சிதைகிறாள். நாலைந்து பேரை அழைத்துக்கொண்டு தப்பிக்கிறாள். வெளி உலகில் எல்லோரும் குருடர்கள். அதிநவீன தொழில்நுட்ப உலகம் ஸ்தம்பித்துவிட்டது. சாப்பாடு இன்றி, நிர்வாணமாயும் சபித்தும் நடமாடும் மனிதர்கள். அதிர்ச்சி தந்த படம்.

**ந**ம்மூர் நவீன இலக்கியவாதிகள் கொண்டாடும் 'மாய யதார்த்தவாதி' காப்ரிய கார்சியா மார்க்கிஸின் 'A very old man with enormous wings' படமும் இடம்பெற்றது. மார்க்கசும் இந்தப் படத்துக்கு வசனம் எழுதியிருக்கிறார். இது தமிழில் நாடகமாக நடிக்கப்பட்டது.

கேரளப் பல்கலைக்கழகத்தில் - திரைப்பட விழாவின் ஒரு நாளில் நான் 'நானும், என் எழுத்தும்' என்ற தலைப்பில் தமிழ்த் துறை மாணவர்கள் மத்தியில் பேசியபோது, ஒரு மாணவி 'காஞ்சிவரம்' தமிழ்ப்படம் விழாவில் இடம் பெற்றது பற்றிக் கேட்டார்: ''தமிழ்ப்படம் எடுக்கக்கூட மலையாள இயக்குநர்தான் கிடைத்தாரா? தமிழர்கள் என்ன செய்கிறார்கள்?'' தங்கர்பச்சானின் 'பள்ளிக்கூடம்', 'ஒன்பது ரூபாய் நோட்டு' மற்றும் 'சுப்ரமணியபுரம்', 'மொழி', 'பருத்திவீரன்', 'வெயில்' பற்றி சொன்னேன். '''பருத்திவீரன்' இங்க சக்கை போடு போட்டது. சுப்ரமணியபுரம் இப்போ சக்கை போடு போடுது.''

**'கா**ஞ்சிவரம்' மலையாளத் திரைப்பட இயக்குநர் பிரியதர்ஷன் இயக்கியது. காஞ்சிபுரத்தில் வாழும் நெசவாளர்கள் ஒன்றுபட்டுப் போராடுவதை, சுதந்திரத்துக்கு முந்தைய இந்தியச் சூழலில் வைத்து எடுக்கப்பட்ட படம். பிரகாஷ்ராஜுக்கு (நெசவாளர்) தன் மனைவிக்குக் காஞ்சிப் பட்டுடுத்திக் கூட்டி வர ஆசை. நிறைவேறுவதில்லை. மகளின் காதுகளில் சத்யவாக்காக, அவளின் திருமணத்துக்கு காஞ்சி பட்டுப் புடைவைதான் என்கிறார். தனியாக தறிக்கு பட்டு தர முதலாளி சம்மதம் தராத சூழலில், வீட்டில் யாருக்கும் தெரியாமல் தறி போட்டு கொஞ்சம்கொஞ்சமாய் பட்டு நூலைத் திருடி சேலை நெய்கிறார். மகள் பிணமாகக் கிடக்கிறபோது, அந்த பட்டுச் சேலையை அவள் மீது போர்த்துகிறார். பிணத்தின் முகத்தையும் தலையையும் மூடினால் கால் தெரிகிறது. காலை மூடினால் தலை தெரிகிறது. பதினாறு வருடம் நெய்த பட்டு. விரக்தியில் பிரகாஷ்ராஜ் சிரிக்கிறார். உலுக்கி எடுக்கும் பிரகாஷ்ராஜின் நடிப்பு; நா.முத்துகுமாரின் பாட்டு; குழந்தை பெயர் வைக்கும் நிகழ்ச்சி; பிணமாய்க் கிடக்கும் நிகழ்ச்சி என உருக்குகிறது படம்.

நெசவாளர்கள் போராடுவதும், தொடர்ந்து இயங்கி கூட்டுறவு சங்கங்கள் மூலம் உயர்வதும் இன்றைய (உலகமயமாக்கலில் சிறு தொழில்கள் நசியும்) சூழலில் அர்த்தபுஷ்டியான விஷயங்கள். ○

வாழ்ந்துவிட்டுப் போனவர்களின்
கதைகளை
நான் வாசிப்பதில்லை
கேட்பதுமில்லை

அதிலும்,
சாதனைக்குரியவர்கள்
என்னைச்
சலனப்படுத்திவிடுகிறார்கள்

கீழிருந்து மேலெழும்பிய
அவர்களது சூத்திரங்களும்
பட்டபாடுகளும்
பதட்டமடையச் செய்கின்றன

வீடு வீதி தேசம் உறவு
யாவும் துறந்து
துறவியை விடவும்
கடுமையான விரதங்களைக்
கைக்கொண்டிருக்கிறார்கள்

வாழ்ந்த பிறகு கிடைக்கும்
பேறுகளுக்காகக்
கடுந்தவம்
புரிந்திருக்கிறார்கள்

என்னைக் கோபிக்காதீர்கள்
குற்றக் கற்களை
என்மீது வீசாதீர்கள்
ஒரு கோழையின்
கண்ணீரைப்போல
என்னையும்
துடைத்துத் தேற்றுங்கள்

ஓரளவு
தெரிந்துவிட்டது

நாளைக்கு
நானிருக்க மாட்டேன்
அனுமதியுங்கள்
வாழ்ந்து போகிறேன்
விட்டுப்போக எதுவுமில்லை
என்னிடம்

# விட்டுப்போதல்



யுகபாரதி




'தசாவதாரம்' படத்தில் அமெரிக்க விஞ்ஞானியாக, கமலுடன் ஓரிரு காட்சிகளில் நடித்தவர் ஷம்மு. அமெரிக்காவில் வாழும் தமிழ்ப் பெண். இவர் இப்போது 'மயிலு' மற்றும் 'மலையன்' படங்களின் கதாநாயகி.

'தசாவதாரம்' படத்தில் நடிக்கும்போது ஷம்முவின் வயது 14. "நான் பரதநாட்டியக் கலைஞர். கே.எஸ். ரவிகுமார் என் நடன சி.டி.யைப் பார்த்திருக்கார். உடனே என்னை நேர்ல வரச் சொன்னார். நான் முதல்ல பார்த்துப் பேசினது ரவிக்குமார் மற்றும் கௌதமியைத்தான். அப்போ கமலைப் பார்த்து ஹாய் மட்டும்தான் சொன்னேன். நாசாவுல வேலை பார்க்கிற தமிழ் விஞ்ஞானி வேடத்துக்காக மூணு நாள் நடிச்சேன். என் முதல் காட்சியே அழறதுதான். கமல் சார் கிளிசரின் போட்டுவிட்டு எப்படி நடிக்கணும்னு சொல்லிக் கொடுத்தார். நடனத்திலேயே என்னோட ரோல் மாடல் கமல்தான். அவரோட நான் நடிச்சது நம்ப முடியாதது."

பிரகாஷ் தயாரித்து இளையராஜாவின் இசையில் அடுத்த மாதம் வெளிவரவிருக்கும் 'மயிலு' படத்துக்குத் தேர்வான கதையைச் சொன்னார் ஷம்மு. "நடிப்புல எனக்குச் சின்ன வயசிலிருந்தே விருப்பமிருந்தாலும் அமெரிக்காவுல இருந்ததால், அது வெறும் பேராசையா மட்டும்தான் இருந்திச்சு. நான் அடிக்கடி சென்னைக்கு வருவேன். ஃபோட்டோகிராஃபர் சுகுமார் கிட்ட என் போர்ட்ஃபோலியோ ஃபோட்டோ ஷூட் பண்ணினேன். அவரோட அண்ணன் ஜீவன் இயக்குநர். மயிலு படத்துக்காக அவர் புதுமுகம் தேடினபோதுதான் என் படங்களைப் பார்த்திருக்கார். அடுத்த நாளிலிருந்து நான் மயிலாயிட்டேன். அப்புறம் பிரியதர்ஷன் சாரோட கனவுப் படமான காஞ்சிவரத்துலயும் எனக்கு ஒரு வேடம் கிடைச்சது. கரணோட 'மலையன்' படத்துல நான்தான் அவர் ஜோடி. எல்லாமே கனவு மாதிரியிருக்கு. இந்தியாவின் ஏஞ்சலினா ஜோலினு பார்க்கறவங்க எல்லாரும் பாராட்டுறாங்க. அடுத்ததா ரசிகர்களோட பாராட்டுக்காகக் காத்திட்டிருக்கேன். இந்தப் பதினாறு வயசுல நானும் கோலிவுட்ல ஓர் அங்கம்ங்கிறது எத்தனை பெருமைக்குரிய விஷயம்" என்கிறவரின் ஒன்பது வயதுத் தங்கை ஷாலு, 'மயிலு' படத்தில் ஜூனியர் ஷம்முவாக நடித்திருக்கிறார்.

"அமெரிக்கா வாசமாக இருந்தாலும் நான் ரொம்ப கலாசாரமான பொண்ணு. அங்கே வெளியில போகும்போது பெரும்பாலும் பாவாடை தாவணி, புடைவைதான் கட்டுவேன். நிச்சயம் பணத்துக்காகவோ, புகழுக்காகவோ நான் நடிக்கலை. அமெரிக்காவுல என்னால காலம் முழுக்க சொகுசான வாழ்க்கை வாழமுடியும். ஆனா நல்ல நடிகைன்னு பேர் வாங்கறதுதான் என் குறிக்கோள். இதுக்காக நான் எந்தச் சமரசமும் செஞ்சுக்க மாட்டேன். மயிலுல எனக்குக் கிராமத்துப் பொண்ணு வேஷம். படம் முழுக்கக் கறுப்பான பொண்ணா வருவேன். கண்ணாடியில என்னைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கலை. ஆனா, கதாபாத்திரத்துக்கு அதுதானே தேவை. அது கமர்ஷியல் படம் கிடையாது. யதார்த்தமான படம். மக்கள் எப்படி வரவேற்கப் போறாங்கன்னு ஆவலாயிருக்கேன்." ●

# ஜெயபாஸ்கரன்



தமிழ்த் திரைப்படங்களின் சண்டைக் காட்சிகள் மிகவும் விநோத மானவை. காதலும், வீரமும், பாசமும் கலந்து குழைந்த திரைப்படங்கள் வெளி வரத் தொடங்கிய நாளிலேயே இந்த விநோதமும் தொடங்கியது. சமூக அநீதி களைத் தட்டிக்கேட்கும் கதாநாயகன் போடுகிற சண்டைகள், இவ்வளவு அபத்த மாக இருக்கின்றனவே என்று எவரும் தட்டிக் கேட்க முடியாத நிலை.

இரண்டரை மணி நேர தமிழ்த் திரைப் படத்தில் சராசரியாக ஐந்து பாடல் காட்சிகளும், ஐந்து சண்டைக் காட்சிகளும் இடம் பெறுகின்றன. இவை யிரண்டு காட்சிகளுக்குமான 'உள் இயக் குநர்களாக' நடன ஆசிரியரும் சண்டைப் பயிற்சியாளரும் நியமனம் செய்யப் படுகிறார்கள்.

இன்றைக்குத் தயாரிக்கப்படுகின்ற தமிழ்த் திரைப்படங்களின் சண்டைக் காட் சிகள், எப்படியிருக்க வேண்டும் என்பது, ஐம்பது ஆண்டுகளுக்கு முன் னரே தீர்மானிக்கப்பட்டு அதன் படியே நிகழ்த்தப்படுகிறது. சண்டைக் காட்சிகளுக்கென்றே வாழ்ந்துவரும் வீரர்களை 'டூப்' என்று அழைக்கிற உளவியல் வன்முறை இன்னும் துயரம்.

மனித சமூகத்தில், மனிதர்கள் நேருக்கு நேராக மோதிக்கொள்கிற சண்டைகள் ஒவ்வொன்றும், ஒருவிதமாக இருக்கின்றன என்பதே யதார்த்தம். ஆனால், தமிழ்த் திரை யுலகம் யதார்த்தத்தோடு எந்தக் காலத் திலும் உடன்படப் போவதில்லை என்ப தற்கு ஏராளமான உதாரணங்களைச் சுட்டலாம்.





★ பாய்ந்து பாய்ந்து குதித்து பத்துப் பதினைந்து குண்டர்களைப் புரட்டிப் புரட்டி அடித்த பின்பும், கதாநாயகன் அணிந்திருக்கிற கறுப்புக் கண்ணாடி அவன் கண்களைவிட்டு விலகு வதேயில்லையே, அது எப்படி?

★ சண்டைகளில் கதாநாயகனுக்கு நேரும் இக்கட்டான தருணமொன்றில், அவன் கைத்துப்பாக்கியில் அல்லது வில்ல னின் கைத்துப்பாக்கியில் தோட்டா தீர்ந்து போகிற துயரம் எப்போது மாறும்?




★ நேருக்குநேர் நின்று மோதி வெல்ல முடியாத கதாநாயகனை, ஒரு கட்டையைத் தூக்கிக்கொண்டு மறைந்து வந்து பின் மண்டையில் அடிக்கும் 'அந்த ஒருவன்' இல்லாத சண்டைகள் சாத்தியமில்லையா?

★ சண்டைக் காட்சியெனும் பெயரில் காய்கறிகளை வெட்டி வீழ்த்தி, உணவுப் பொருள்களைச் சிதற அடித்து கவிழ்ப்பதை, அத்தியாவசிய உணவுப் பொருட்களின்மீது நெடுங்காலமாக நிகழ்த்தப்பட்டு வரும் ஊடக வன்முறையாகக் கருதலாமல்லவா?

★ ஒரு ஐம்பது நிமிட சண்டைக் காட்சியில் கதாநாயகன் மீது ஐம்பதுக்கும் மேற்பட்ட குத்துகள் விழுந்த பின்பும், அவன் எளிதாகத் தாங்கிக் கொள்வதும், அதே நாயகன் தம்மைத் தாக்கும் ஒவ்வொருவருக்கும் தலா ஒரு குத்து விடும்போது அவர்கள் தாங்க முடியாமல் கதறுவதும் நகைச்சுவை அல்லவா?

★ துப்பாக்கித் தோட்டா துளைத்தெடுத்த பின்னரும்கூட, முக்கியமான செய்திகளை மறக்காமல் சொல்லிவிட்டுச் சாகிற கதாபாத்திரங்களை உண்மையான துப்பாக்கிகள் மன்னிக்குமா?

வினாக்கள் தொடர்ந்து எழுந்த வண்ணமிருக்கின்றன. உரிய விடையைச் சொல்லத்தான் தமிழ்த் திரையுலகம் திராணியற்றுத் தயங்கிக் கொண்டிருக்கிறது.

யதார்த்தப் படைப்பாளிகளின் எண்ணிக்கையும், அவர்களது கலைப்படைப்புகளின் ஆளுமையும் மிகக் குறைவாக இருப்பதன் விளைவாகவே, தமிழ்த்திரையுலகம் அபத்தம், ஆபாசம் மற்றும் வன்முறை ஆகியவற்றின் கூடாரமாக விளங்குகிறது. விதிவிலக்கான சில நல்ல படைப்பாளர்களும் வணிக அச்சுறுத்தலுக்கு அடங்கிவிடுகிறார்கள் அல்லது

# வரவேற்பறை வன்முறை!

அடக்கப்படுகிறார்கள்; வணிகமயத்தின் விளைவையே நாம் நமது வீடுகளின் வரவேற்பறைகளில் அனுபவித்துக் கொண் டிருக்கிறோம்.

காட்சி ஊடகத் துறையில், ஒரு காட்சி ஊடகம் இன்னொரு காட்சி ஊடகத்தை இந்த அளவுக்குச் சார்ந்து இயங்குகிற நிலையை, உலக அளவில் வேறு எங்குமே காண முடியாது. தொலைக்காட்சி நிறுவனங்கள், தாம் ஒளிபரப் பும் தொடர்களிலும் பிற நிகழ்ச்சிகளிலும் வன்முறைக் காட்சிகளை ஓரளவுக்குக் கட்டுக்குள் வைத்திருந்தாலும், திரைப்படங்களின் வன்முறைக் காட்சிகளை ஒளிபரப்புவதில் மட்டுமீறிக் காட்டப்படுகிற வன்முறைக் காட்சிகளால் நமது வீடுகளின் இளைய தலைமுறைச் சிறுவர்கள், தங்களையும் அறியாமல் வன்முறை சார்ந்த மன உணர்வுகளுக்குத் தள்ளப்படுகிறார்கள்.



சில ஆண்டுகளுக்கு முன்பு, ரஷ்யா வின் ஒரு பள்ளியில் பயங்கர வாதிகள் நடத்திய வெடிகுண்டு தாக்குதலில் கொல்லப்பட்ட குழந்தைகளின் படங்களை 'இஸ்வெஸ்தா' என்ற ஒரு ரஷ்யப் பத்திரிகை வெளி யிட்டது. அந்தப் பத்திரிகை யில், பணம் போட்டுப் பங்குதாரராக இருக்கும் ஒரு சாரார் பத்திரிகை அலு வலகத்துக்குப் பூட்டுப்

**பாய்ந்து குதித்து பதினைந்து குட்டிக் கரணம் போட்ட பின்பும் கதாநாயகன் போட்டிருக்கும் கண்ணாடி கீழே விழுவதில்லையே. அது எப்படி?**

எந்தக் குறையையும் வைப்பதில்லை.

நமது தமிழ்த் திரையுல கினர், எல்லாவற்றையும் 'காட்டுவது'தான் காட்சி ஊடகம் என்று வாதிடவும் கூடும். ஆனால் காட்டக்கூடாத காட்சிகளை, இன்னொரு காட்சி யால் நாகரிகமாகவும் உணர்த்த வேண்டும் என ஏன் விளங்கிக் கொள்ளவில்லை?



ஆபாசத் திரைப்படக் காட்சிகள் நமது வரவேற்பறையின் தொலைக்காட்சி யில் ஒளிபரப்பாகும்போது பல்வேறு வயதுடையவர்களைக் கொண்ட நாகரிக மானதொரு குடும்பம், வலி நிறைந்த வொரு மௌனத்தைக் கடைப்பிடிக்கிறது.

போட்டுவிட்டனர்! அப்போது அவர்கள் சொன்ன காரணம் : ''இப்படியெல்லாம் படங் களை வெளியிட்டுச் சம்பாதிக் கத் துணிந்த பத்திரிகையும் லாபமும் எங்களுக்கு வேண் டாம்.''

வன்முறைக் காட்சிக ளை நீங்கள் ஏன் பார்க்கிறீர் கள்? தொலைக்காட்சியை மூடி விடுங்கள் என்றும் ஒரு தரப்பினர் வாதிடக்கூடும். இப்படிப்பட்ட வாதம், காட்டப்படுகிற வன்முறைகளைக் காட்டி லும் கொடியது. சமூகப் பொறுப்புணர்ச்சி என்பது இழிவுகளில் இருந்து நம்மை வில் ஒதுங்கிக்கொள்வதா? அல்லது அவற்றைக் கண்டித்துக் களையெடுக்க முனைவதா?

# 'அள்ளப்படும்' கோடிகள்

காதைக் கொடுங்க

● தமிழகம் முழுவதும் ஆற்று மணல் விற்பனையை அரசு நடத்தி வருவதாகத்தான் வெளித்தோற்றம். ஆனால், விற்பனையைத் தன் பிடிக்குள் வைத்துக்கொண்டு, ஆளும் அரசியல் வாதிகளைக் 'கவனித்து' வருபவர் கோவையைச் சேர்ந்த ஒருவர். அது அ.தி.மு.க. ஆட்சியாகட்டும், தி.மு.க. ஆட்சியாகட்டும், மணலில் கோலோச்சுவது இவர்தான். இந்தப் பிரமுகர் இப்போது கனிம வளத்துறை கட்டுப்பாட்டில் இருக்கும் ஏரி, குளங்களில் மண் (சவுடு என்றும் சொல்வார்கள்) எடுக்கும் 'உரிமை'யையும் பெற்று விட்டாராம். இந்தச் சவுடு மண், கட்டடம் கட்டுபவர்களுக்கு பள்ளத்தை மூடி மேடாக்கத் தேவைப்படும். ஒரு ஏரியில் பள்ளம் தோண்டி ஒரு லோடு மண் எடுக்க அரசுக்குக் கொடுக்க வேண்டியது 80 ரூபாய். ஆனால் வெளியில் விற்பது 2500 ரூபாய். 80 ரூபாய் மட்டும் கட்டிவிட்டு ஒரே அனுமதியை வைத்து, பல லோடுகளையும் அடிக்கிறார்கள். காஞ்சிபுரம், திருவள்ளூர் மாவட்டங்களில் மட்டும் ஒரு மாதத்தில் பத்துகோடி வரை லாபம் பார்க்கிறது, இந்த மண் மாஃபியா. இதில் எண்பது சதவிகிதம் ஆளும் அரசியல்வாதிகளின் வாரிசுகளுக்கு சரியாகச் சென்று வருகிறதாம். அப்புறம் கவலை ஏன்?



● அ.தி.மு.க.வில் முக்குலத்தோருக்கு கட்சியில் செல்வாக்கும், முன்னேற்றமும் இருக்கும் என்பார்கள். அதுபோல தி.மு.க.வில் நாடார்களுக்கும் முன்னணி மற்றும் முன்னுரிமை கொடுக்கும் 'வேலை' சத்தம்போடாமல் நடப்பதாகச் சொல்கிறார்கள். இந்த வகையில் கனிமொழியை வழிகாட்டியாக ஏற்றுச் செயல்படுகிறார்களாம் சிலர். அவர்களின் நோக்கம் எதிர்காலத்தில் கனிமொழி முக்கிய இடம் பெறவேண்டும் என்பதுதானாம்.



* நரேந்திர மோடி

சமீபத்தில் அரங்கநாயகம் முரசொலியில் கனிமொழியின் பாராளுமன்றப் பேச்சைச் சிலாகித்து, பெரிய கட்டுரை எழுதியிருந்தார். முன்னாள் அமைச்சர் பூங்கோதை ராஜ்யசபா உறுப்பினர் வசந்தி ஸ்டாலினுக்கும் இந்தக் கும்பலின் ஆதரவு இருக்கிறதாம்.

● நரேந்திர மோடி என்றாலே வெளிநாடுகள் அலர்ஜியாகும். இந்த நிலையில் உலகப் பொருளாதாரப் பேரவை, டாவோஸில் (சுவிட்சர்லாந்து) நடத்த இருக்கும் மாநாட்டுக்கு மோடியை அழைத்திருக்கிறது. ஏற்கெனவே இதில் கலந்து கொண்டுள்ள சத்குரு ஜகிவாசுதேவை இந்த விஷயத்தில் கன்ஸல்ட் செய்ய 'தாராளமாய்க் கூப்பிடுங்கள்' என்றாராம் அவர்!

■ ஸ்ரீநி ■

■ ப்ரியன் ■

**தொல்.திருமாவளவனுக்கும், காங்கிரஸுக்கும் மோதல் வலுத்துக்கொண்டே வருகிறது. நாம், அவரைச் சந்திக்கச் சென்றிருந்தபோது, மனிதர் படுடென்ஷனில் இருந்தார். 'சிறுத்தைகள் சத்தியமூர்த்தி பவனுக்குள் சென்று காங்கிரஸ்காரர்களைத் தாக்கியதாகச் செய்தி வந்ததுதான் காரணம்.' அவரை நார்மலுக்குக் கொண்டுவர திரைப்படங்களில் அவரது ஈடுபாடு குறித்த கேள்விகளுடன் துவக்கினோம்...**



# "மாயாவதி

**'அன்புத் தோழி'க்குப் பிறகு...?**

திரைப்படங்களில் நடிப்பது என்பது திட்டமிட்ட நுழைவு அல்ல. நட்பு வட்டாரத்தின் அன்பு காரணமாக, படங்களில் நடிக்கிறேன். அன்புத்தோழிக்குப் பிறகு 'கலகம்' என்ற படத்தில் கதாநாயகனாக நடிக்க அழைப்பு வந்தது. புரட்சி நாயகன் சேகுவாரா வாழ்க்கையை ஒட்டிய கதை இது. ஆனால், பொருளாதாரச் சிக்கல் காரணமாகப் படப்பிடிப்பு இன்னும் தொடங்கவில்லை. அதன் பிறகு 'தமிழரசன்' என்ற படத்தில் வாய்ப்பு கிடைத்தது. கீழ்வெண்மணி சம்பவங்களைப் பின்னணியாகக் கொண்ட கதை அது. அதேசமயத்தில் 'மின்சாரம்' என்ற படத்திலும் நடிக்க அழைத்தார்கள். இதிலும் கதாநாயகன்தான். 'தமிழரசன்', 'மின்சாரம்' இரண்டும் ஒரு கட்டப் படப்பிடிப்பு முடிந்துவிட்டது. 'மின்சாரத்'தில் ஒரு பாடல்கூட எழுதி இருக்கிறேன்.

**நடிப்பதை ஏற்றுக் கொள் கிறார்களா?**

ஒரு காலத்தில் திரைப்படங்களால்தான் சமூகச் சீரழிவுகள் ஏற்படுகின்றன; அவற்றைப் பார்ப்பதே குற்றம்; நேர விரயம் என்ற எண்ணம் கொண்டிருந்தவன்தான் நான். ஆனால்,திரைப்படம் ஒரு சக்திவாய்ந்த மீடியம் என்பதைப் பின்னர் புரிந்துகொண்டேன். இருபது ஆண்டுகளாக மேடையில் பிரசாரம் செய்து வந்த கருத்துக்களை, மக்களிடம் விரைவாகக் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற நோக்கமே, நான் படங்களில் நடிக்கக் காரணம். 'நிஜவுலகத்தில் புரட்சியாளராக,

போர்ப்படைத் தளபதியாக இருக்கும் நீங்களே, கனவுலகத்தில் ஏன் அப்படி நடிக்க வேண்டும்?' என்று என் தோழர்கள் சிலர் கேட்கிறார்கள். இருந்தாலும், என் அரசியல் பணிகளுக்கு இடையூறு இல்லாத வகையில் நேரத்தை வகுத்துக்கொண்டு, படங்களில் நடிக்க முடிவு செய்துவிட்டேன்.

**இலங்கைப் பிரச்னையில் கலைஞருக்கு நெருக்கடிகள் கொடுப்பது சரியா?**

தவறில்லை என்று உச்ச நீதிமன்றத்தில் சொல்லியிருக்கிறார்கள்.

**ராஜீவ்காந்தியின் உயிர்த் தியாகத்தை குறைத்து மதிப்பிடுவதா?**

காங்கிரஸார் இந்த விஷயத்தில் அரசியல் செய்கிறார்கள். ராஜீவ்காந்தி பெயரைச் சொல்லி அனுதாபத்தின் மூலம் அரசியல் நடத்துவதே காங்கிரஸில் உள்ள சிலருக்கு நோக்கமாக இருக்கிறது. ராஜீவ், உயிர்த் தியாகத்தைப் பெரிதும் மதிக்கிறேன்.

# ஒரு சர்வாதிகாரி!"

## திருமாவளவன் குற்றச்சாட்டு!



வரப்போகும் பாராளுமன்றத் தேர்தலைவிட, இலங்கையில் நடைபெறும் இனப் படுகொலையைத் தடுத்து நிறுத்துவது எங்களுக்கு முதன்மையாகப்படுகிறது. ஆனால், அதற்காக முரணாகப் பேசி கூட்டணிக்குள் குழப்பத்தைக் கொண்டுவருவது என் நோக்கமல்ல. தடை செய்யப்பட்ட விடுதலைப்புலிகளுக்கு ஆயுத உதவிகள் செய்தாலோ அல்லது அவர்கள் இங்கே செயல்பட வசதி செய்துகொடுத்தாலோ தான் குற்றம். அதுபோன்ற எந்தச் செயல்களிலும் நாங்கள் ஈடுபடவில்லை; களத்தில் நிற்கும் புலிகளைப் பற்றிய அவதூறுப் பிரசாரத்தை முறியடிக்கும் வகையில் பேசுகிறோம்; அவ்வளவுதான். வைகோ வழக்கில், தடைசெய்யப்பட்ட இயக்கங்களை ஆதரித்துப் பேசுவதில்

ஆனால், சோனியாவின் மனிதாபிமானம் காரணமாக நளினிக்கேகூட தூக்கு தண்டனை, ஆயுள் தண்டனையாக குறைக்கப்பட்டிருக்கிறது. மேலும் பிரியங்காவும் நளினியும் சந்தித்துப் பேசியிருக்கிறார்கள். யதார்த்தத்தை



**சோனியாவுக்கு இருக்கும் மனிதாபிமானம்கூட தமிழக காங்கிரஸ் தலைவர்களுக்கு இல்லை!**

காங்கிரஸார் புரிந்துகொள்ள வேண்டும்.

**இலங்கைத் தமிழர்களா... புலிகளா...?**

ஈழப் போராட்டத்தை இலங்கைத் தமிழர்கள் மற்றும் புலிகள் என்று பிரித்துப் பார்க்காதீர்கள். மேலும், சிங்கள அரசேகூட பிரச்னையைத் தீர்க்க புலிகளுடன்தானே பேச்சுவார்த்தை நடத்துகிறது. இதுவரை 25,000 புலிகள், ராணுவத்துடன் நடந்த மோதலில் இறந்து போயிருக்கிறார்கள். 80000 அப்பாவித் தமிழர்களை சிங்கள ராணுவம் கொன்றிருக்கிறது. இதைத் தட்டிக் கேட்டுத் தடுத்து நிறுத்துவதில் நாம் அனைவரும் ஒன்றாக இணைய வேண்டும்.

**உங்களைக் கைது செய்ய வேண்டுமென காங்கிரஸார் குரல் கொடுக்கிறார்களே...?**

கைது என்பது எனக்குப் புதிதல்ல. மூத்த அரசியல்வாதியான கலைஞருக்கு இந்தப் பிரச்னையை எப்படிச் சமாளிப்பது என்பது தெரியும். இன்றுள்ள சூழ்நிலையில் மத்தியில் மீண்டும் காங்கிரஸ் தலைமையிலான ஆட்சி அமையவேண்டும் என்பதே எங்கள் நோக்கம். அதற்காக தீவிரப் பிரசாரம் செய்வோம். எனவே ஈழப் பிரச்னையை உணர்ச்சிபூர்வமாகவும், மேலோட்டமாகவும் அணுக வேண்டாம் என்று காங்கிரஸைப் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். உடனடி போர் நிறுத்தத்துக்கு மத்திய அரசு, சிங்கள அரசை வற்புறுத்த வேண்டும்.

**மாயாவதி கலக்குகிறாரே!?**

அவர் ஒன்றும் தமிழகத்துக்குப் புதிதாக வந்துவிடவில்லை; பலமுறை வந்திருக்கிறார். இப்போது ஊடகங்கள்தான் பரபரப்பு உண்டாக்குகின்றன. எந்த தலித் தலைவர்களையும் சகோதரத்துவத்துடன் பார்க்கும் பார்வை அவரிடம் இல்லை. பரந்த நோக்கும் ஜனநாயகச் சிந்தனையும் இல்லாதவர் மாயாவதி. ஏகாதிபத்தியத்தை அரசியலில் புகுத்தியவர். அதிகாரத்துக்கு வர வேண்டும் என்பதற்காகவே கொள்கைகளை உதறியவர். பி.எஸ்.பி.யால் எங்களுக்கு எந்த ஆபத்தும் இல்லை. எங்கள் தோழர்கள் இன்னமும் வேகத்தோடும், உற்சாகத்தோடும் களத்தில் நிற்கிறார்கள். ●



■ தஞ்சை பரத்வாஜ் ■



# நடக்குமென்பார்; நடக்கும்!

## புத்தாண்டு பலன்கள் - 2009

### மேஷம்



உற்சாகமான வருடம். எண்ணங்கள் செயல்வடிவம் பெறும் காலம். வழக்கு வெற்றி பெற்று மனசஞ்சலம் தீரும். இடமாற்றமும் மனமாற்றமும் வளர்ச்சிக்கானதாகவே அமையும். மனை வாங்குதல், புதுமனை புகுதல் இதில் நிச்சயம் ஒன்று நடந்தே தீரும். சந்தோஷம்தானே? சும்மா ஜமாய்ங்க!

**பலம் :**

அரசியல் செல்வாக்குக் கூடுவதும்; அயல்நாடு செல்வதும்; சினிமா பிரவேசம் மற்றும் முதலீடும் வாழ்வை உச்சத்துக்கு அழைத்துச் செல்லும்.

**பலவீனம் :**

குறிப்பிட்டு எச்சரிக்கும் அளவிலான பலவீனங்கள் ஏதுமில்லை.

**பரிகாரம் :**

வியாழன்தோறும் குரு பகவானுக்கு விளக்கேற்றி பூவால் அர்ச்சனை செய்து வருவது போதுமானது.

### ரிஷபம்



இலையுதிர்காலமாக இருந்த உங்கள் வாழ்வில், இப்போதுதான் வசந்த காலம் துவங்கியுள்ளது. திருமணத் தடை, வழக்கு, கடன் சுமை, எதிரிகளின் சூழ்ச்சி, உடல்கேடு, பணக் கஷ்டம், வியாபார நஷ்டம், மனக்

குழப்பம்... என்ன பயந்திட்டீங்களா? இதுல ஒண்ணுகூட உங்களை நெருங் காது. உன் மனசாட்சிக்கு எது சரியோ அதைச் செஞ்சுக்கிட்டு போய்க்கிட்டே இரு; பொறாமைக்காரங்க குய்யோ, முய்யோன்னு புலம்புறதைக் கொஞ்சம் நீயும் ரசித்துப் பாரு!

### பலம் :

மகான்களின் சந்திப்பும் அரசியலில் புதிய பதவியும் இந்த வருடத்தில் உங்களைப் பலமாக்கும்.

### பலவீனம் :

ஏதுமில்லை. அதனாலேயே ஆணவ மும் தலைகனமும் வராம பார்த்துக்கங்க.

### பரிகாரம் :

கணபதியைக் கும்பிட்டு காரியத்தைத் துவங்குங்க. லாபமோ நஷ்டமோ எல் லாமே உன்னாலதான், நீதான் பொறுப் புன்னு அந்த யானை முகத்தான்கிட்ட பொறுப்பை ஒப்படைச்சிட்டு உங்க வேலையப் பாருங்க.

## மிதுனம்



தங்கத்தைப் புடம் போடுவது போல உங் களுக்கு இது சோதனை யான காலம். தங்கம் தூய்மையாகி மிளிர்வதற்கு முன் நெருப் பில் உழல்வது தவிர்க்க முடியாதது. 1) அவசரப்பட்டு வேலையை விட்டுவிடக் கூடாது. 2) சகாக்களிடம் எச்சரிக்கையாக இருங்கள். 3) நெருங்கியவர்கள் பிரிந்து போனாலும் 'போனால் போகட்டும் போடா'ன்னு இருங்க. 4) கண் விழித்ததும் கடவுளைப் பார்த்துட்டுக் காரியத்தைத் துவங்குங்க. இது நான்கும் கட்டளைதான்.

### பலம் :

வாக்குக் கொடுக்காம, வாதம் செய்யாம இருக்க முயற்சி செய்தால் அதுவே பெரிய பலம். இந்த ஒரு விஷயமே பல விஷயங்களில் உங்களைக் காக்கும்.

### பலவீனம் :

மன உளைச்சல், அமைதியின்மை இருக்கும். தூக்கம் குறையும். கட்டிடத் தொழிலில் முதலீடு வேண்டாம். சினிமா, அரசியலில் கொஞ்சம் பட்டும் படாம இருங்க. காலை வாரி விட்டுடும்.

### பரிகாரம் :

நவக்கிரகத்தைச் சுத்தி வாங்க; விளக்கேத்துங்க. வியாழன், செவ்வாய் மறக்காம கோயில் போய் கண்ணை மூடி ஐந்து நிமிஷம் உட்கார்ந்திட்டு வாங்க.

## கடகம்



அற்புதங்களை அள்ளி வழங்கும் மகிழ்ச்சியான ஆண்டு. இது மாதிரி சந்தர்ப்பம் அமையறது கஷ்டம். யார் யாருக்கு நல்லது பண்ணிப் பேர் வாங்க முடியுமோ, நல்லதைச் செஞ்சு புண்ணியத்தை டெபாசிட் செய்ய முடியுமோ, உன்னைச் சுத்தியிருக்கிற எந்த உறவு ஜனங்களைத் தூக்கிவிட முடியுமோ அதையெல்லாம் செஞ்சு முடிச்சிடு. அது போதும் - இது ஏழு ஜென்மத்துக்குமான ஹோம் வொர்க்கா அமையும்.

### பலம் :

என்ன நடக்கும்? எப்படியிருக்கும்னு யார்கிட்டேயும் ஜோசியம் பார்க்காதே - ஏன்னா... இந்த வருஷம் முழுதும் உன் காட்டில மழை! எல்லாமே உனக்குச்

சாதகமாயிருக்கும். இந்த வருஷத்து ஹீரோ நீதான்.

### பலவீனம் :

எச்சரிக்கக் கூடிய அளவில் ரெட் சிக்னல் ஏதும் இல்லை.

### பரிகாரம் :

நவக்கிரகக் கோயில் சென்று தீபம் ஏற்றி ஆஞ்சநேயரிடம் உங்கள் குறையைச் சொல்லி வாருங்கள், அது போதும்.

## சிம்மம்



போராட்டம் மிகுந்த ஆண்டு. வெற்றிகளை இலவசமா எப்பவும் யாரும் கொடுப்பதில்லை. உங்களுக்கான வெற்றியை, போராடிப் பெறவேண்டிய காலம். உங்க வெற்றி எல்லாவற்றிலும் சாத்தியம்னு தெரிஞ்சு போச்சு. அதனால போராட வேண்டியது நிர்பந்தம்தானே? பெஸ்ட் ஆஃப் லக்!

### பலம் :

உங்களின் தன்னம்பிக்கையும் விடா முயற்சியும் இறை நம்பிக்கையும்தான் உங்கள் பலம். அதை வைத்துத்தான் உங்கள் வாழ்க்கையை வடிவமைத்துக் கொள்ளவேண்டும். சுயபலமே உனக்கான சொர்க்கம்.

### பலவீனம் :

தேவையற்ற பழி வந்து சேரும். கண்ணில் விளக்கெண்ணெய் விட்டு உஷாராய் இரு. நல்லது செய்தாலும் கெட்ட பெயர் வரும். சிவனேன்னு சிலகாலம் இரு. ஆன்மிகவாதிகளுக்கு அவப்பெயர் வாசலைத் தட்டும் (எல்லாம் கொஞ்ச காலம்தான்).

### பரிகாரம் :

வியாழன்தோறும் குருபகவானுக்குத் தீபம் ஏற்றி குரு காயத்ரி படித்து வரவும். சனிக்கிழமைதோறும் சனீஸ்வர பகவானுக்குத் தீபமேற்றிப் பூஜை செய்யவும். வந்த துன்பம் பனியென விலகும்.

## கன்னி



லட்சியங்கள் நிறைவேறும் ஆண்டு. உங்கள் லட்சியங்களால் எவரும் துன்பப்படவோ வயிறு எரியவோ சாத்தியம் இல்லையெனில், அந்த லட்சியம் இவ்வருடம் நிறைவேறும். புதிய தொழிலும் புதிய பதவியும் புதிய தொடர்புகளும் சர்வசாதாரணமாய் உங்களைத் தேடி வரும். ஒரு தேவதையைப் போல அது உங்களைத் தூக்கிச் செல்லும்.

### பலம் :

பூர்வீகச் சொத்து பாகப் பிரிவனை உங்களுக்கு சாதகமாகும். அரசியல் முயற்சிக்கும், பயணத்துக்கும் சாதகமான காலமாய் இது இருக்கும். சினிமா உலக முயற்சி கூட லாபகரமானதாகவே இருக்கும்.

### பலவீனம் :

நீண்ட தூரப் பிரயாணமும் அதனால் செலவுகள் ஏற்படுவதையும் தவிர வேறு ஒன்றும் பலவீனமான சூழல் இல்லை.

### பரிகாரம் :

சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயர் சுவாமிக்கு துளசிமாலை சாற்றி, வழிபட சங்கடம் தீரும். நவக்கிரகங்களில் குரு, கேதுவுக்கு விளக்கேற்றினால் இன்னும் சிறக்கும்.

*- மற்ற ராசிகள் அடுத்த இதழில்...*

# பாக்டீரியாவுக்கு

## ஹாஸ்பிடல் எத்திக்ஸ் 10

ஜி.எஸ்.எஸ்.

**ப**ல் சிகிச்சை செய்யும் மருத்துவர்களில் கணிசமானவர்களும் மருத்துவமனைகளும் செய்யத் தவறும் ஒரு விஷயத்தை, பல் மருத்துவர் ஒருவர் நம்மிடம் வருத்தத்துடன் பகிர்ந்துகொண்டார்.

''முன்பெல்லாம் டாக்டர்கள் கையாளும் கருவிகளை, கொதிக்கும் நீரில் போட்டுச் சுத்தம் செய்வதோடு நிறுத்திக் கொள்வார்கள்.

ஆனால், இப்போது பாக்டீரியாவின் 'பிடிவாதமும்' அதிகமாகிவிட்டது. அவற்றை அழிப்பது சுலபமாக இருப்பதில்லை. ஆனால், நல்லவேளையாக அவற்றை நீக்குவதற்குப் புதிய முறைகளும் அறிமுகமாகிவிட்டன.

எங்கள் சிகிச்சை முறையில் அறுவைச் சிகிச்சைகளுக்குப் பயன்படுத்தும் கருவிகளை 'ஆட்டோக்ளேவ்' (Autoclave) முறையில் சுத்தம் செய்வோம் - அப்படித்தான் செய்ய வேண்டும். அதாவது அதிக அழுத்தத்தில் நீராவியில் கருவிகளைக் கணிசமான நேரத்துக்குக் கொதிக்க வைப்பதன் மூலம், அவற்றிலுள்ள பாக்டீரியாக் கிருமிகள் நீங்கிவிடும். ஒருவிதத்தில் நம் சமையலறை பிரஷர் குக்கர் செயல்படும் அதே வழிமுறைதான் இதுவும் என்று வைத்துக் கொள்ளுங்களேன்.

பற்களை ட்ரில்லிங் (Drilling) செய்யப் பயன்படும் கருவி போன்றவற்றை, வேறொரு விதத்தில் சுத்திகரிக்க வேண்டும். ஒரு அக்ரிலிக் பெட்டியில் ஃபார்மால்டிஹைட் ரசாயனம் கலந்த கலவையில், இதுபோன்ற கருவிகளை சில மணி நேரம் வைத்திருப்பதன் மூலம் அவற்றில் உள்ள கிருமிகள் நீங்கிவிடும்.

சிகிச்சையின்போது பயன்படுத்தப்படும் எவர்சில்வர் ட்ரேக்கள் போன்றவற்றை மேற்படி முறைகளில் சுத்தம் செய்வது நடைமுறையில் சாத்தியம் இல்லை. இவற்றை அதற்குரிய ரசாயன திரவத்தில் முக்கி எடுப்போம்.

மேலே குறிப்பிட்டபடி பல்வேறு கருவிகளையும் உபகரணங்களையும் சுத்தம் செய்யவில்லை என்றால் சுலபமாக நோய்கள் பரவும். நோய் பரவுவதற்கு டாக்டரே காரணமாக இருப்பது என்பது மிகவும் அவலமான நிலை. ஆனால், இந்த நிலைதான் பல இடங்களில் நிலவுகிறது.



அதுவும் வாய்ப் பகுதியில்தான் தொற்றுக் கிருமிகள் மிக அதிகமாக வசிக்கின்றன. அங்குள்ள ஈரப்பதம், அவை வளர்வதற்கும் பெருகுவதற்கும் மிகவும் வசதியானது.

ஏதோ பல் மற்றும் ஈறு தொடர்பான நோய்கள் மட்டுமே, சரியாகச் சுத்திகரிக்கப்

விலை இரண்டரை லட்சம் ரூபாய். ஐந்தாயிரம் ரூபா யிலும் இந்தக் கருவியின் மலிவுப் பதிப்பு கிடைக் கிறது. வருத்தம் என்ன வென்றால், இதைக்கூட பல இடங்களில் சரி யாகப் பயன்படுத்து வதில்லை. இந்தக் கரு வியை வாங்கி வைத் திருக்கும் க்ளினிக்கு களையும் சேர்த்து தான் சொல்கிறேன்.



# விருந்தோம் 'பல்'!



படாத கருவிகள் மூலம் பரவும் என்று நினைக்க வேண்டாம். பல் சிகிச்சையில் பல்லும் ஈறும் மட்டுமல்ல. இவற்றுக்கு அஸ்திவாரமாக உள்ள ரத்தம் என்பதும் ஒருபகுதி என்பதை மறந்துவிடக்கூடாது. காலராவிலிருந்து மஞ்சள் காமாலை வரை எதுவேண்டுமானாலும் ஒரு நோயாளி யிடமிருந்து மற்றவருக்குப் (அரைகுறை யாகச் சுத்தம் செய்யப்பட்ட கருவிகள் மூலம்) பரவ வாய்ப்பு அதிகம். பல் மருத் துவர் இந்தவிதத்தில் மிகவும் பொறுப்பான வராக நடந்துகொள்ள வேண்டும்.

ஆனால், நடைமுறையில், இன்னமும் கூட அரைகுறை முயற்சிகள்தான் பல இடங்களில் எடுக்கப்படுகின்றன. ஒரு தலைசிறந்த ஆட்டோக்ளேவ் கருவியின்

எதனால் டாக் டர்கள் இந்த விஷயத்தில் அசிரத்தையாக இருக்க வேண்டும்? வேறொன்றுமில்லை. நேரத்தை மிச்சப் படுத்தத்தான்! ஒருமணி நேரத்துக்காவது ஆட்டோக்ளேவ் முறையில் கருவிகள் சுத்தப்படுத்தப்பட வேண்டும். ஈஸியான வழியில் குறைந்த நேரத்தில் 'ஏதோ' சுத்தம் செய்தால், அதிகம் பேருக்கு சிகிச்சை அளித்து அதிகத் தொகை பெறலாமே என்கிற ஆசை, விஞ்ஞான உண்மைகளை அறிந்திருந்தும் சில டாக்டர்களின் பார்வையை மறைத்து விடுகிறது. இதனால் பெரும் விபரீதங்கள் நேரலாம்.''

**(தொடரும்)**

**■ உத்தமபுத்திரன் ■**

கோடம்பாக்கத்தில் கதை கந்தன் தலையில் சில கதை ஃபைல்களைச் சுமந்துகொண்டு திருவிளையாடல் சிவாஜி போல, குரல் கொடுத்துக்கொண்டே செல்கிறான்.

*கதை கந்தன்:* கதை வேணுமா கதை... புரொடியூஸரே... கதை வேணுமா கதை...?

(அப்போது ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கிறார் புரொடியூஸர் பூமிநாதன்.)

*பூமிநாதன்:* ஏம்பா... கதை என்ன விலை?

*க.கந்தன்:* ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு விலைங்க. இதெல்லாம் சாதாரண கதையில்லைங்க. விசேஷமான கதை.

*பூமிநாதன்:* அப்படியென்னப்பா விசேஷம்?

*க.கந்தன்:* ஐயா... அம்மா செண்டிமெண்ட்டுன்னா அம்பது நாள் ஓடுங்க... காதல் கதைன்னா காலம் மட்டும் ஓடுமுங்க. நட்புக் கதைன்னா நாலு வாரம் ஓடுங்க.

*பூமி:* கதையே இல்லைன்னா...

*க.கந்தன்:* ஊரை விட்டு புரொடியூஸர் ஓடுவாருங்க...

# பாம்பாலே...



*பூமி:* தம்பி... உன்னோட கதையைவிட உன் வாய்க்கொழுப்பு எனக்குப் பிடிச்சிருக்கு. உள்ள வாப்பா.

*க.கந்தன்:* (உள்ளே சென்று அமர்கிறான்) முன்ன மாதிரி இப்ப கதை ஓட்டம்... இல்லிங்க...

*பூமி:* ஏம்பா... கதை யாரும் வாங்கறதில்லையா...?

*க.கந்தன்:* எங்க சார்... ரெண்டு இந்தி... ஆறு இங்கிலீஷ்... நாலு தெலுங்கு படம் பாத்து கட்டு ஒரு கதை ரெடி பண்ணிடறாங்க... அதுல சிலது... ஓடுது.... சிலது... பாடுது... சிலது தூங்குது... சிலது புரொடியூஸரையே கொல்லுது.

*பூமி:* அதெல்லாம் போகட்டும்... தம்பி... என் கடனையெல்லாம் தீர்க்கற மாதிரி ஒரு கதை இருந்தா கொடு...

*க.கந்தன்:* நான்

ஒரு கதையைச் சொன்னா உங்க கடனெல்லாம் தீர்ந்துடும்.

**பூமி:** இன்னொரு கதையைச் சொன்னா?

**க.கந்தன்:** உங்க கதையே தீர்ந்துடும்.

(புரொடியூஸர் பூமிநாதன் அதிர்ச்சியாகிப் பார்க்க, கதை கந்தன் கூலாக)

**க.கந்தன்:** மொத்தம் எவ்வளவு கடன் இருக்கு... முதல்ல அதைச் சொல்லுங்க...

**பூமி:** முதல் சம்சாரத்துல இருந்து ஆரம்பிக்கட்டா...? கடைசி சம்சாரத்துல...

# பாம்பாலே...

**க.கந்தன்:** (தடுத்து நிறுத்தி) போதும்... மொத்தம் 15 கோடிக்கு மேல கடன் இருக்கா...?

**பூமி:** கரெக்டா... சொல்லிட்டீங்க.... அதனாலதான்... 'எந்திரன்' படத்தைத் தயாரிக்க முடிவு செஞ்சேன்.




**க.கந்தன்:** அப்புறம்... என்னாச்சு...?

**பூமி:** காக சுண்டிப் போட்டுப் பாத்ததுல... 'பூ' விழுந்து... சன் டி.வி.காரங்க வாங்கிட்டாங்க.

**க.கந்தன்:** சரி... அதை விடுங்க... 'பைட்டானிக்'னு ஒரு கதையிருக்கு... எடுக்கறீங்களா...?

**பூமி:** டைட்டானிக்... தெரியும் அதென்ன 'பைட்டானிக்'?

**க.கந்தன்:** டாஸ்மாக்குல தண்ணியடிக்கிற ஒருத்தன்... கொஞ்சம் கொஞ்சமா... போதைல மூழ்கிப் போறதுதான் கதை.

**பூமி:** பெரிய பட்ஜெட் படமா சொல்றீங்க... தம்பி இன்னும் சிம்பிளா... சொல்லுங்க.

**க.கந்தன்:** அப்படின்னா ஆயா வடை சுடற கதைய... கொஞ்சம் மாத்தி வெச்சிருக்கேன்... அது...

**பூமி:** என்னெய் விக்கிற விலைக்கு... அவ்வளவு முதலீடு போட்டுப் படம் எடுக்க முடியாது தம்பி... வேற சொல்லுங்க.

**க.கந்தன்:** அதை விடவும்... குறைவான பட்ஜெட்னா பாம்பு படம் எடுக்கிறதைத்தான் படமா எடுக்கணும். அப்படியே எடுக்கறதா இருந்தாலும்... எல்லாப் பாம்பும் ராமநாராயணன் சார் படத்துல நடிச்சி... ஸ்டார்

ஜாலி ஸ்டோர்ஸ்

அந்தஸ்த்துல இருக்கு...

**பூமி:** அப்ப புதுமுகப் பாம்பை நடிக்க வைங்க. ஒவ்வொரு புத்தாப் போயி தேடுங்க... இதுல இன்னொரு வியாபாரத் தந்திரமும் வெச்சிருக்கேன்.

**க.கந்தன்:** (ஆர்வமுடன்) அப்படியா... என்ன தந்திரம் சார்...?

**பூமி:** படம் பார்க்க வர்ற ஜனங்களுக்குப் பரிசுப் போட்டி அறிவிச்சு... பல தடவை படம் பார்த்தவங்களுக்கு பாம்பை இலவசமா கொடுப்போம்.

**க.கந்தன்:** பிரமாதம் சார்...சூப்பர் சார்... ஆமா... பாம்பை வெச்சுக்கிட்டு என்ன பண்ணுவாங்க...?

**பூமி:** வித்தை காட்டிப் பிழைக்கறாங்க... இல்லேன்னா... வீசி எறியறாங்க... அதெல்லாம் நமக்கெதுக்கு... நல்ல டைட்டிலா சொல்லுங்க...?

**க.கந்தன்:** பாம்பாலே... பாம்பாலே...

**பூமி:** இன்னும் கொஞ்சம் 'பூத்'தா சொல்லுங்க...

**க.கந்தன்:** பாம்பு... பெருச்சாளி... மற்றும் பலர்...

**பூமி:** மேட்சிங்கா இல்லியோ... யோசிங்க...

**க.கந்தன்:**(யோசித்தபடி) பாம்புகள் ஆயிரம்... பாம்பண்ணாமலை... சார்... 'புத்து'ன்னு வைக்கலாம் சார்... மூணெழுத்து படம் செமையா ஓடியிருக்கு.

**பூமி:** புத்து... சூப்பர்... (கை கொடுக்கிறார்.)

**க.கந்தன்:** அப்புறம்... கதையோட தமிழ், தெலுங்கு, மலையாளம், இந்தி, ஸ்பானிஷ், கொங்கணி எல்லா ரைட்ஸும் எனக்குத்தான்.

**பூமி:** வெச்சுக்கோ... எத்தனை சண்டைக் காட்சி... எத்தனை டூயட்...?

**க.கந்தன்:** நாலு கிரிப் புள்ளைங்க... வளைச்சு... வளைச்சு... வளைச்சு.. தாக்குற மாதிரி ரெண்டு சண்டை வெச்சுக்கலாம். 'புத்தான கண்ணாலே கொத்தாதே நீயென்ன'ன்னு பாட்டு வெச்சிக்கலாம். முதல் அட்வான்ஸ் கொடுங்க... சார்...

**பூமி:** அட்வான்ஸா... உள்ள ரெண்டு முட்டை இருக்கு... ஆம்லெட் போட்டு சாப்பிடுங்க... அதான்... அட்வான்ஸ்.

*(அப்போது... சில பெண்கள் மற்றும் போலீஸ் திடுதிப்பென்று உள்ளே வருகின்றனர்.)*

**பெண் 1:** இங்க யாரு... பாம்பை வெச்சுப் படம் எடுக்கறதா பேசினவங்க...?

**பூமி:** நாங்கதான்... நீங்க... யாரு...?

**மற்றொருத்தி:** நாங்க பாம்பு பாதுகாப்பு மையத்துல இருந்து வர்றோம். பாம்பை வெச்சு... சித்ரவதை பண்ணிப் படம் எடுக்கறதா கேள்விப்பட்டு வந்தோம்...

**க.கந்தன்:** பேசிக்கிட்டுத்தான் இருந்தோம்.

**பெண் 2:** பாம்பு பத்தி பேசறதுக்கே ஒப்புதல் கடிதம் வாங்கணும்.

**பூமி:** பாம்பாட்டிக்கிட்டயா...

**பெண்1:** இல்ல பாம்புகிட்ட.

*(என்றதும் இருவரும் கோரஸ்ஸாக 'பாம்புகிட்டயா...!' என்றபடி மயங்கி விழுகின்றனர்.)*



"அந்த மேக்கப்மேன் ரொம்ப நேர்மையானவர்."

"எப்படி சொல்றே?"

"வயசான ஹீரோ முகத்துக்குப் பட்டி பார்த்த செலவுன்னு ஆயிரம் ரூபா எழுதியிருக்கார்."

நிரஞ்சன்

# முரண்!

■ லதானந்த் ■

மாதப்பன் கோவையின் மிகப் பெரிய தொழிலதிபர். ரியல் எஸ்டேட், ஃபிலிம் டிஸ்ட்ரிப்யூட்டிங், சினிமாத் தியேட்டர், லாட்ஜ்கள், டெக்ஸ்டைல், இன்ஜினியரிங் காலேஜ், மெடிக்கல் காலேஜ், ஆர்ட்ஸ் காலேஜ், கிரானைட் க்வாரி, ட்ரான்ஸ்போர்ட் ஏஜன்ஸி, வீட்டு உபயோகப் பொருள் விற்பனை, கார்ப்பொரேட் மருத்துவமனைகள் என்று பல துறைகளிலும் வெற்றிக் கொடி நாட்டுபவர்.

மேனேஜ்மென்ட் கன்ஸல்டன்ஸிக்காக பல தேசங்களைச் சுற்றி வருபவர்.

அவரது மனைவி பத்மா பிராணி வதைத் தடுப்பு, செஞ்சிலுவைச் சங்கம், மகளிர் சுய உதவிக் குழுக்கள் அமைப்பு, உழைக்கும் மகளிர், ஓஸோன் படலப் பாதுகாப்பு, கவியரங்கங்கள் எனப் பல துறைகளிலும் ஆர்வமுள்ளவள்.

அவர்களது மகன் கிரிதர். பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, மாறுவேடப் போட்டி, மனப் பாடப் போட்டி, ஓவியப் போட்டி, நீளம் தாண்டுதல், உயரம் தாண்டுதல், ஹர்ட்ல்ஸ் ரேஸ், ஈட்டி எறிதல் எனப் பல விளையாட்டு மற்றும் தடகள நிகழ்ச்சிகளிலும் பரிசு வாங்கு பவன்.

சரி! இந்த அறிமுகத்தோடு மேலே படியுங்கள்.

''பிளேன் டிக்கெட் எடுத்து வெச்சாச்சா?'' என்று மனைவியைக் கேட்டபடியே புறப்பட ஆயத்தமானார் மாதப்பன்.

''எல்லாம் ரெடி. டிஃபன் சாப்பிட்டுட்டுப் புறப்படுங்க'' என்றாள் பத்மா.

''ஓ! நோ! நோ! போற வழியிலே பார்க் ஷெராட்டன்ல்லே டிஃபன் சாப்பிட்டுக்கிறேன்.''

''அப்படியே கிரிதரை கம்ப் யூட்டர் கிளாசிலே எறக்கி விட்ருங்களேன்...'' என்று இழுத்தாள்.



''அவனோட கார்லே போகச் சொல்லு. என்னை ஏன் டிஸ்டர்ப் பண்றே?'' என்றவாறு தன்னுடைய காரில் புறப்பட்டார் மாதப்பன்.

அவரது கவனம் முழுவதும் அடுத்த நாள் மாநாட்டில், தான் ஆற்றவேண்டிய சர்வதேச சிக்கன நடவடிக்கைகள் பற்றிய உரை மீது இருந்தது.

குறிப்பு : கதை முடிஞ்சதுங்க. இந்தக் கதைக்கு என்ன தலைப்பு வெக்கலாம்னு பாத்தாக்க, நெறையக் கமா (அதாங்க காற் புள்ளி) கதையில வர்றதால கமாக் கதைன்னு வெச்சிட்டேன். ஆனால் பாருங்க! கமாக் கதையை காமக் கதைன்னு வாசிச்சா அதற்கு ஏ முத்திரை கிடைச்சிடும்னு முரண்னு மாத்திட்டேன். ●

# 10 ஆயிரத்தில் ஒருவன்



❋ ரகுபிள்ளை

விற்பனைத் துறையில் வேலைக்குப் போகும் இளைஞர்களிடம், நேர்முகத் தேர்வில் 'இந்திய சில்லறை வணிக வியாபாரத்தின் தந்தை யார்?' என்று கேட்டால், தயங்காமல் 'ரகுபிள்ளை' என்று பதில் வரும். யார் இவர்? சாதாரண பட்டதாரி; நடுத்தர குடும்பப்பிள்ளை. விற்பனைப் பிரதிநிதியாக வாழ்க்கையைத் துவக்கி, படிப்படியாக உயர்வு பெற்று, இந்தத் துறையில் வருடச் சம்பளம் ஒரு கோடிக்கும் மேல் பெற்றவர். ஆர்.பி.ஜி. நிறுவனத்தின் சார்பில் ஸ்பென்ஸர் நிறுவனத்தின் மெகா ஷாப்பிங் மால்களைக் கட்டியதில், இவருக்குப் பெரும் பங்குண்டு. ஆடைகள் விற்கும் நிறுவனமான பாண்டலூன் பிரசித்தி பெற்றது, ரகு பிள்ளையின் வியாபாரத் தந்திரங்களால்தான். இன்று நாடு முழுவதும் புட்வேர்ல்டு சங்கிலித் தொடர் சூப்பர் மார்க்கெட்டுகள் சக்கைபோடு போடுகின்றன. அந்த வெற்றிக் கதைக்குப் பின்னே இருப்பவரும் இவர்தான். விட்டுவிடுவாரா முகேஷ் அம்பானி? ரிலையன்ஸ் சில்லறை வர்த்தகம் துவக்கியபோது, அதன் தலைவராக வளைத்துப்போட்டார். ஆனால், உண்மையான சவாலை ரிலையன்ஸில்தான் சந்தித்தார் ரகுபிள்ளை. தனியார்துறை மெகா நிறுவனமான ரிலையன்ஸ் காய்கறிகள், மளிகை சாமான்கள், வீட்டு உபயோகப் பொருட்கள் விற்பதற்கு நாட்டின் பல இடங்களில் பெரிய எதிர்ப்பு கிளம்பியது. 'சாதாரண வணிகர்களின் பிழைப்பில் மண் விழும்' என்று கோஷங்கள் தோன்றின.



அரசியல்வாதிகளும் திரண்டனர். ரிலையன்ஸ் சூப்பர் மார்க்கெட்டுகள் அடித்து நொறுக்கப்பட்டன; ஆட்கள் மிரட்டப்பட்டார்கள். மிகவும் பொறுமையாகக் காய்களை நகர்த்தி அரசியல்வாதிகளைச் சமாளித்து இன்று சில்லறை வணிகத்தில், தனக்கென ஓர் இடத்தை ரிலையன்ஸ் பிடிக்க காரணமாகியிருக்கிறார் ரகுபிள்ளை. காய்கறிகள் பழங்கள் கொள்முதல் செய்யும்போது, ரிலையன்ஸ்,

# வாழவைக்கும் 'வாய்'ப்பு!

## 'மாஃபா' பாண்டியராஜன்



விவசாயிகளுக்கு அதிக விலை கொடுத்து, நுகர்வோர்களுக்குச் சகாயமான விலையில் விற்கிறது. மேலும், குஜராத் ஜாம் நகர் பகுதியில் ஒரு லட்சம் மாமரங்கள் கொண்ட பெரிய்ய தோப்பை உருவாக்கியிருக்கிறது. ரிலையன்ஸ் சில்லறை வர்த்தகத்தைத் தூக்கி நிலைநிறுத்திவிட்டார் ரகுபிள்ளை.

**ர**குபிள்ளையின் திறமை நமது இளைஞர்கள் பலரிடம் இருக்கிறது. தெருவில் போக்குவரத்து ஆபத்துக்களைக் கண்டு பயப்படாமல் கரடி பொம்மையை விற்றாலும் சரி, பஸ் நிறுத்தங்களில் கனமான புத்தகங்களை விற்றாலும் சரி, உங்களுக்குள் இருக்கவேண்டியது நெருப்பாகத் தெறிக்கும் உறுதி. எந்தக் கட்டத்திலும் சோர்வுக்கு இடம் தராதீர்கள். சொல்ல வரும் விஷயங்களைத் தெளிவாகச் சொல்வது; சுருக்கமாகச் சொல்லுவது; அடுத்தவர் மனத்தைப் படம் பிடிப்பது; தான் விற்கும் ப்ராடக்டைப் பற்றி அடியோடு தெரிந்து வைத்திருப்பது; மேலும், அதே ப்ராடக்டுக்குப் போட்டியாளர்கள் இருந்தால், அவர்களைப் பற்றி தெரிந்து கொள்வது - என்று பல தகுதிகள் ஒரு விற்பனையாளருக்குத் தேவை. நல்ல தரமான பொருளை மார்க்கெட் பண்ணக்கூட, தெளிவான திறமையான தகவல்தொடர்பு தேவை. போக்குவரத்து உற்பத்தி, எண்ணெய் எரிவாயு, தகவல் தொடர்பு, வங்கிகள், காப்பீடு, மருந்துகள், தொழில்நுட்பம், நுகர்வோர் பொருட்கள், மின்னணு சாதனங்கள், ஆடைகள்... என்று சகல துறைகளில் விற்பனை தொடர்பான

# பாண்டி 'S BLOG

எம்.பி.ஏ. படித்தால்தான் சேல்ஸ் லைனில் பெரிய ஆளாக வர முடியுமா? இல்லை; துடிப்பும், அர்ப்பணிப்பும் கிரகிக்கும் ஆற்றலும், வெளிப்படுத்தும் வசீகரமும் இருந்தால்போதும்; மேலும் கொஞ்சம் பயிற்சி இருந்தால் விற்பனைத் தொழிலில் அசத்தலாம். வறுமைக் கோட்டுக்குக் கீழே இருக்கும் ப்ளஸ் டூ படித்தவர்களுக்கு சேல்ஸ் தொழிலில் பயிற்சி கொடுப்பதற்கென்றே துவக்கப்பட்டதுதான் லேப்ஸ். சென்னை மாநகராட்சியும், ரெட்டி 'லேப்ஸ்' என்ற தனியார் நிறுவனமும் இணைந்து, இந்த முயற்சியைத் துவக்கியிருக்கின்றன. ஏழை இளைஞர்களின் சமுதாயத் தேவையைக் கணக்கில் கொண்டு, வளர்ந்துவரும் போட்டி நிறைந்த வேலை தேடலில் அவர்களைத் திறமைமிக்க விற்பனைப் பிரதிநிதிகளாக உயர்த்துவதுதான் லேப்ஸ் அமைப்பின் நோக்கம். சென்னையில் அயனாவரம், அம்பத்தூர், ஆயிரம் விளக்கு... பகுதிகளில் இந்தப் பயிற்சிக்கூடங்கள் இருக்கின்றன. இங்கு பயிற்சி தரும் பொறுப்பை 'மாஃபாவின் சொர்ணம்மாள் அறக்கட்டளை' செய்கிறது. எண்பது சதவிகிதம் பேருக்கு 5000 ரூபாய் முதல் 8000 ரூபாய் சம்பளத்தில் வேலை கிடைத்துவிடுகிறது. பயிற்சிபெற்ற 300 இளைஞர்கள், விற்பனைத் தொழிலை சுயதொழிலாக வைத்து, தொழில் முனைவோர் ஆகியிருக்கின்றனர்.

இளைஞர்களின் முடிவெடுக்கும் திறமை வளர்க்கப்படுகிறது. அடுத்து தொழில் பயிற்சி. விற்பனைத் தொழிலின் ரகசியங்களைப் போதிக்கும் பயிற்சி. அடுத்து தன்னைத்தானே மதிப்பிட்டுக் கொள்ளும் பயிற்சி. மார்க்கெட்டுகளின் தேவைக்கேற்ப, தனது தகுதி வளர்ந்திருக்கிறதா என்று கணித்துப் பார்ப்பது. இளைஞனுக்குத் தன்னம்பிக்கை ஏற்படுத்தி தளராத ஊக்கத்தை சொல்லிக்கொடுப்பார்கள். பெண்கள் சுயஉதவிக் குழுக்கள் அமைப்பது, அவர்களுக்குத் தொழிற்பயிற்சி ஆகியவையும் நடைபெறுகின்றன.



*வேலைவாய்ப்புகள் கொட்டிக் கிடக்கின்றன. இந்தத் துறையில் பிரகாசிக்க வைக்கத் தேவை படிப்பும், பட்டமும். சுமாராகப் படித்தவர்களாக இருந்தாலும், துடிப்போடு இருப்பவர்களுக்கும் வாய்ப்புகள் உண்டு. இன்று செல்ஃபோன், மின்னஞ்சல், வலை உலகம் போன்றவை ஒரு ப்ராடக்டைப் பற்றிய தகவல்களை நேரடியாக நுகர்வோருக்குக் கொண்டு சேர்க்கின்றன. இருந்தும் இறுதி கட்ட விற்பனை என்பது விற்பனையாளர்கள் கையில்தான் இருக்கிறது.*

(வெளிச்சம் வீசும்) *எழுத்தாக்கம் :* **ஸ்ரீநி**

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்.

? ''பாபர்மசூதி இடிக்கப்பட்டதைத் தொடர்ந்து இந்தியாவில் தீவிரவாதம் தலைதூக்கியது'' என்று கி. வீரமணி குறிப்பிட்டுள்ளது பற்றி...?

! ''தலைதூக்கியது'' என்பதற்குப் பதில் ''தீவிரமடைந்தது'' என்று கூறியிருந்தால், வீரமணி சொன்னதை ஏற்கலாம். நிற்க; ஒரு குற்றம் மேலும் பல குற்றங்களை நியாயப்படுத்தாது.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? கல்கியுடன் இலவசமாக 2009ஆம் ஆண்டு காலண்டர் தந்தால் என்ன?

! ஆண்டுக்கு ஒருமுறை காலண்டரை விட, ஆண்டு முழுவதற்குமான அவசிய விஷயங்களைத் தந்து, வழி சொல்வதுதான் சிறப்பு.

● எல்.எம்.அபிதா, திருவண்ணாலை. ★

? உ.பி. மாயாவதியால் தமிழகத்தில் அரசியல் பணி முடுக்கப்படுவது நமக்குச் சாதகமா? பாதகமா?

! தமது பி.எஸ்.பி. அகில இந்தியக் கட்சியாக வளரவேண்டும்; வாய்ப்பிருந்தால் தாம் பிரதமராக வரவேண்டும் என்ற ஆசையால், மாயாவதி முடுக்கப்படுகிறார். தமிழகத்தில் ஏராளக் கட்சிகள் ஏற்கெனவே மக்களைக் கவர்ந்திருப்பதால், இங்கே அவரது முயற்சி முடக்கப்படுகிறது. ஆகவே, இப்போதைக்கு சாதக - பாதகங்கள் நமக்கேதுமில்லை; மாயாவதிக்குத்தான்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? வைகோ திருமங்கலத்தை விட்டுக்

# திருமங்கலம் இடைத்தேர்தல் திருப்புமுனையா?

✱ கணிப்பும் கருத்தும்!



# நீங்கள் கேட்டவை

## -தராசு



✱ தியாகமும் தந்திரமும்!



✱ முடுக்கலும் முடக்கமும்



✱ அடியும் அம்மியும்!

**கொடுத்தது பெருந்தன்மையா? நிர்ப் பந்தமா?**

! நிர்ப்பந்தத்தை ஏற்ற பெருந்தன்மை என்பதை விட, சாமர்த்தியம் என்றே சொல்லலாம். இப்போது விட்டுக்கொடுத் தால், பின்னால் பேரத்துக்கு உதவும். இன்னொன்று, தி.மு.க. தோற்றால், அ.தி.மு.க. வெற்றியில் வைகோ பங்கேற்க லாம். தி.மு.க. வென்றால், அது அ.தி.மு.க. வின் தோல்வியாகிவிடும். வைகோ நழு விக் கொள்ளலாம்.

● **சி. இந்து அழகேஷ், கள்ளக்குறிச்சி.**

? **'இந்தியா பொறுப்புமிக்க நாடு' என்று கூறிவிட்டு, தீவிரவாதிகளை இந்தி யாவிடம் ஒப்படைக்கமுடியாது என் கிறதே பாகிஸ்தான்?**

! பாகிஸ்தான் பொறுப்பற்ற நாடு என்று சொல்லாமல், செயலில் காட்டுகிறார்கள்.

● **த. பரதன், திருவாரூர்.**

? **எம்.ஜி.ஆருக்குத் திண்டுக்கல் போல தே.மு.தி.க.வுக்குத் திருமங்கலம் திருப்புமுனையாக அமையும் என் கிறாரே கேப்டன்?**

! இப்போதுள்ள சூழலில் திருமங்கலத் தில் தேர்தல் அமைதியாக நடந்துமுடிந் தால், அது தமிழக அரசியலுக்கே ஒரு திருப்புமுனையாக அமையும்!

● **ஜெ. செல்வராணி, மதுரை.**

? **''இந்தியா - பாக்.கில் அமைதி நிலவ வேண்டுமானால், அவ்விரண்டு நாடுகளும் தங்கள் பிரச்னைகளைத் தாங் களே தீர்த்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும்'' என்று பாக். மூத்த பத்திரிகை யாளர் முஷாகித் ஹுசேன் என்பவர் கூறியுள்ளது பற்றி?**

! மூத்த பத்திரிகையாளர் கருத்தை மதித்து, பாகிஸ்தான் வேதாள அரசு, முருங்கை மரத்தை விட்டுக் கீழே இறங்கி வந்தால், அது முதல் முயற்சியாக இருக் கும்.

● **வி.எம். செய்யதுபுகாரி,**
**அதிராம்பட்டினம்.** ❑

? **அமெரிக்க அதிபர் புஷ் மீது செருப்பு வீசிய ஈராக் நிருபரை, அரபு நாட்டு மக்கள் ஹீரோவாகக் கொண்டாடு வது பற்றி?**

! ஈராக் தொடர்பான புஷ்ஷின் கொள் கைகள், நடவடிக்கைகள் நாகரிகமானவை அல்ல. என்றாலும் கூட, அமெரிக்க ஜனாதி பதி மீது காலணிகளை வீசுவதை ஏற்க இயலவில்லை - அதிலும் ஒரு நிருபர், பத்திரிகையாளர் கூட்டத்துக்கு ஒரு நம்பிக்கையின் பேரில் அழைக்கப்பட்ட வர், இப்படி அநாகரிகமாக நடந்துகொண் டிருக்கக் கூடாது. அவரை ஹீரோவாகக் கொண்டாடுவது சரியல்ல. உணர்ச்சி சரி; அதை வெளியிட்ட முறை தவறு.



* தலையும் தீவிரமும்



* தேர்தலும் திருப்பமும்!



* பொறுப்பும் மறுப்பும்!

● கல்யாணி பாலு, புதுக்கோட்டை.

? அழகிரியும், ஆட்சியும் இருந்தாலும், திருமங்கலம் இடைத்தேர்தல் முடிவுகளைக் கொண்டு பாராளுமன்றத் தேர்தல் முடிவுகளைக் கணிக்கமுடியாது எனக் கருணாநிதி முன் கூட்டியே உதாரணங்கள் மூலம் அச்சாரம் போடுகிறாரே?

! பாராளுமன்ற தேர்தல் முடிவுகளைக் கணிக்க முடியாது என்பது உண்மையே; ஆனால், இன்றைய தமிழக அரசின் செயல்பாடு குறித்து மக்களின் கருத்தை நிச்சயமாகக் கணிக்கமுடியும் - தி.மு.க. ஆதரவு வோட்டுக்களின் எண்ணிக்கையை வைத்து.

● என். சண்முகம்,
திருவண்ணாமலை.

? ''குடியை ஒழிக்காவிட்டால், எத்தனை ஐந்தாண்டுத் திட்டங்கள் வந்தாலும் சமுதாயத்தின் நிலை மாறாது'' என்கிறாரே ராமதாஸ்?

! அடி மேல் அடி அடித்து அம்மியை நகர்த்தியிருக்கிறார்! 'படிப்படியாக மதுவிலக்கு' என்று ஏற்றுக்கொண்டிருக்கிறாரே முதல்வர்!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்.

? காதலை ஏற்றுக்கொள்ளாத பெண்களைக் கொலை செய்யும் வெறித்தனம், நம் இளைஞர்களிடையே வளர என்ன காரணம்?

! ஒரு சம்பவத்தை வைத்து எல்லா இளைஞர்களையும் எடைபோடக் கூடாது என்றாலும், இதுபோன்ற நிகழ்வுகள் அதிகரித்து வருவதை மறுக்கமுடியாது. காதல் என்பதன் மெய்ப்பொருளை உணர்த்துவதற்குப் பதிலாக, அதைப் பேராசையாகவும் இச்சையாகவும் உருமாற்றும் சினிமா, டி.வி. போன்ற ஊடகங்களும் இதற்கு ஒரு காரணம். வழிகாட்ட வேண்டிய தலைவர்களும் கல்வி முறையும் வழி தவறி நடப்பது இன்னொரு காரணம்.

❑ ரூ 100 பரிசு பெறுபவர் :
**வி.எம். செய்யது புகாரி,** அதிராம்பட்டினம்

* ரூ 50 பரிசு பெறுபவர் :
**எல்.எம். அபிதா,** திருவண்ணாமலை.

● வாசுதேவன், நவி மும்பை.

? சமீபத்திய சோதனை?

! காவல் துறை உத்தரவுக்கிணங்க, சங்கீத சபாக்கள் நிகழ்த்தும் மெட்டல் டிடெக்டர் சோதனைதான்! ❑

■ அஜயன்பாலா ■



# சிம்லி

'பசி'தான் எல்லாவற்றுக்கும் காரணம். அந்த இரண்டெழுத்து அரக்கன் மட்டும் இல்லாவிட்டால், என் வாழ்வின் கறைபடிந்த அந்தச் சம்பவம் நிகழ்ந்திருக்க வாய்ப்பே இல்லை. இன்று அது நடந்து பன்னிரண்டு ஆண்டுகள் கடந்துவிட்டன. வாழ்க்கை இப்போது எனக்குச் சில விதிகளை உருவாக்கித் தந்திருக்கிறது.

எனது இயக்கத்தில் இதுவரை இரண்டு படங்கள் வெளியாகிவிட்டன. இரண்டுமே வெற்றிப் படங்கள். இப்போது மூன்றாவது படத்துக்கான வேலையில் மும்முரமாக என்னை ஈடுபடுத்தி வருகிறேன். முந்தைய படங்களின் வணிகத்தன்மை இதில் கொஞ்சம்கூட இல்லாமல் வரவேண்டுமென இரவு பகலாக மெனக்கெடுகிறேன். கிட்டத்தட்ட எல்லாமே முடிந்துவிட்டது. இன்னமும் ஒரே ஒரு கதாபாத்திரம். 'கருவேப்பிலை' ஒரு வேலைக்காரி பாத்திரம். படத்தில் சிறிதளவே வந்தாலும் துடுக்கான அந்தப் பாத்திரம், படத்தின் ஜீவனோடு சம்பந்தப்பட்டது. அதற்கு மட்டும் இன்னும் சரியான நடிகை அமையவில்லை. இன்றும் அசலான முகத்தை எனக்குக் காண்பிக்காவிட்டால், ப்ராஜக்ட்டை விட்டே அனுப்பிவிடுவேன் என ஏஜெண்ட்டைக் கடுமையாக எச்சரித்திருந்தேன். அதன் விளைவுதான் என் கையில் இப்போதிருக்கும் இந்த ஐந்து புகைப்படங்கள். அதில் ஒன்று, இந்தக் கதை எழுதக் காரணமாக இருக்கும் 'சிம்லி'யினுடையது. பன்னிரண்டு வருடங்களுக்கு முன் பாண்டியன் மேன்ஷனில் என் பசியைத் தீர்த்த அதே முகம்; அதே கண்கள்; வெகுளித்தனமான சிரிப்பு.

''அண்ணா இட்லி வாங்கலியாண்ணா?''

குரல், என்னைப் பன்னிரண்டு வருடங்களுக்கு முந்தைய ஒரு கோடைக்காலத்து வெக்கை நிறைந்த அறையில் தூக்கிப் போட்டது.

திருவல்லிக்கேணி பாண்டியன் மேன்ஷனைத் தெரியாத வெளியூர் வாசியே இருக்கமுடியாது.

'ப' வடிவத்திலிருந்த அந்த மூன்று அடுக்குக் கட்டடத்தின் நட்டநடுவில், ஒரு பெரிய அத்திமரம். பகல் நேரத்தில் பறவைகளின் இரைச்சல் அங்கே எப்போதும் கேட்டுக்கொண்டே இருக்கும். இப்போதும்கூட அலுவல் காரணமாகச் சாப்பிட நேரமின்றிப் பசியுடன் தவிக்கும் நிமிடங்களில், அந்தப் பறவைகளின் சத்தம் மனசுக்குள் கேட்பதுண்டு.

அப்போது நான் சென்னைக்கு வந்து இரண்டு வருடங்கள்தான் ஆகியிருந்தன. துர்பாக்கியம் என்னை விரட்டிக் கொண்டிருந்தது. உதவி இயக்குநராக வாய்ப்புத் தேடி பல இடங்களில் அலைந்து திரிந்ததுதான் மிச்சம்.

இந்த மேன்ஷனில் 28-ம் எண் அறையில் தங்கியிருந்த, என் ஊர் நண்பன் கம்ப்யூட்டர் படிப்புக்காக சென்னையில் வசிப்பவன். மே, ஜூன் மாதங்களில்

அவன் ஊருக்குச் செல்ல வேண்டியிருந்ததால், அவனது அறையில் என்னைத் தங்கிக் கொள்ள அனுமதித்திருந்தான். அவனுடைய அப்போதைய உதவிக்கு, நான் இப்போது என்ன செய்தாலும் ஈடாகாது. அந்த இரண்டு மாத வாடகைப் பண மும், பின்னாளில் பணம்கிடைத்த பிறகு தந்தால் போதும் எனச் சலு கையும் தந்திருந்தான்.




மறுநாளே, எனது சொத்தாக நான் சேகரித்து வைத்திருந்த சில புத்தகங்களையும் ஆடைகளை யும் அழுக்கு 'ஷூ'வையும் ஒரு பெட்டியில் போட்டு நிரப்பி, இந்த மேன்ஷனுக்குக் குடிபெயர்ந் தேன். அடுத்தநாள் காலை எனக்கு அறிமுகமான பெண்தான் இந்த 'சிம்லி'.

நீலப்பாவாடை, வெள்ளைச் சட்டை, மடித்துக் கட்டப்பட்ட இரட்டைச் சடை பின்னலில் பச்சை ரிப்பனுடன், பள்ளிக்குப் போகும் அவசரத்துடன், ஒரு கையில் இட்லிப் பொட்டலங்கள் நிறைந்த ஒயர் கூடையும், இன்னொரு கையில் எவர்சில்வர் சாம்பார் வாளியுமாக அறைக்குள் வந்து நின்றாள்.

''அண்ணா இட்லி வாங்கலி யாண்ணா?''

''யாரும்மா?''

''இட்லிண்ணா''

''வேணாம்மா.''

அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள்.

''என்னம்மா சிரிக்கிறே?''

''நீங்க டைரக்டருங்களா?''

''யாரும்மா சொன்னாங்க?''

''தோ... இந்த ரூம்ல இருப்பாரே கண்ணாடி போட்டுக்கினு ஒரு அண்ணன். அவரு

சொன்னாரு...''

இன்னும் ஏதோ சொல்ல வந்த அவள் கண்களில், மகிழ்ச்சியும் பரவசமும் மின்னிக்கொண்டிருந்தன.

''பரவாயில்லையே நல்லா பேசறே... பொட்டலம் எவ்ளோம்மா?''

''அஞ்சு ரூபாண்ணா. ஒண்ணு கொடுக்கட்டா?''

அவளே ஒரு பொட்டலத்தைப் பிரித்து, வாளியைத் திறந்து இட்டிலியின் மேல் சாம்பாரையும் ஊற்றித் தந்தாள்.

''எங்க ஸ்கூலுக்குக்கூட போன வருஷம் ஒரு டைரக்டரு வந்தாருண்ணா. இப்பக்கூட ஒரு படம் வந்துச்சே 'குயிலு'ன்னு. அந்தப் படத்துல ஸ்கூல் ஸீன்ல ஒரு பொண்ணு நடிச்சதே அது எங்க ஸ்கூல் தாண்ணா.

என்னைக்கூட அப்ப வரிசையில நிக்கச் சொன்னாங்க. டைரக்டர் கையில ஒரு ஃபோட்டோவை வெச்சிக்கினு, என் முகத்துலகூட வெச்சிப் பார்த்தாரு. இந்தப் பொண்ணுகூட நல்லாருக்குன்னு என்னைப் பார்த்துச் சொன்னாரு.''

''ம்... அப்புறம்..?''

''அப்புறம் 'பி' செக்ஷன்ல இருக்கிற பார்வதியைக் கூட்டிக்கினு போய்ட்டாங்க.''

**அ**தன் பிறகு இரண்டு நாட்களாகத் தொடர்ந்து காலையில் என் அறைக்கு வருவதும், இட்லிப் பொட்டலத்தை, ஒயர் கூடையை என் அறையிலேயே வைத்துவிட்டு, ஒவ்வொன்றாகக் கையிலெடுத்துச் சென்று மற்ற அறைகளுக்குத் தருவதுமாக இருந்தாள்.

அறைக்கு வந்த நான்காவது நாள். வரவேண்டிய பணம் எதுவும் கைக்கு வராததால் பெரிய நெருக்கடி. பழைய இடமாக இருந்தால் கைமாத்து கிடைக்கும்.

ஆனால் இங்கே யாரையும் தெரியாது. அப்படியே தெரிந்தாலும் கௌரவப் பிரச்னை.

காலையிலிருந்தே பசி. சிம்லி வரும் நேரமாகப் பார்த்துக் கதவை அடைத்து வைத்திருந்தேன். இரண்டு முறை தட்டிப் பார்த்துவிட்டுப் போய்விட்டாள்.

கடன் கேட்டுச் சாப்பிட்டிருக்கலாம். ஆனால், நான் அப்படிச் செய்யாததற்குக் கௌரவப் பிரச்னை மட்டும் காரணமல்ல, சிம்லியின் அம்மாதான் ஒரே காரணம். முன்பொருமுறை யாரோ கடன் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, கணக்கில் எசகுபிசகாக மாற்றிச் சொல்ல, மேன்ஷனுக்குள் சிம்லியின் அம்மா வந்து அதகளம் பண்ணி விட்டாளாம்.



"நேத்து விவாகரத்துப் பண்றதா சொன்ன நடிகைகூடவே சேர்ந்து வாழப் போறதா இன்னைக்கு ஹீரோ சொல்றாரே!"

''ராத்திரி அடி பலமா விழுந்திருக்கும்.''

– நிரஞ்சன்

''இது நான் நடிக்கிற படமா தெரியலையே?''

''எப்படி சொல்றீங்க?''

''காஸ்ட்யூம்ல புடைவை யெல்லாம் எழுதியிருக்காங்க.''

- நிரஞ்சன்



இதன் காரணமாகத்தான் சிம்லி வந்த போது கதவைக்கூடத் திறக்காமல் அமைதியாக இருந்துவிட்டேன். ஆனால், பசி என்னை மிகவும் இம்சித்தது. அறைக்கும் வராந்தாவுக்குமாக நடந்து கொண்டிருந்தேன். மாலை கடற்கரைக்குச் சென்றேன்.

ஒருநாள். ஞாயிற்றுக்கிழமையை ஓட்டிவிட்டால் போதும். திங்கட்கிழமை ஒரு நண்பனின் அலுவலகத்துக்குச் சென்று பணம் வாங்கிச் சமாளித்து விடலாம்.

மறுநாள் காலை பசியுடன் விடிந்தது. தலைசுற்றல் வேறு.

காலையில் சிம்லி கூடையுடன் வந்தாள். நான் அமைதியாகச் சிரித்தேன்.

''இட்லி வாங்கலியாண்ணா?''

''உடம்பு சரியில்லைம்மா.''

''கூடை இங்கேயே இருக்கட்டும்ணா.''

வழக்கம்போல கூடையை வைத்து விட்டு, இரண்டொரு பொட்டலங்களுடன் மற்ற அறையை நோக்கிச் சென்றாள்.

என் முன் இட்லிப் பொட்டலங்கள். வயிற்றிலோ பசி.

அவள் திரும்பி வந்தாள். நேரமாகி விட்டது என அவசரத்துடன் கூறிக்கொண்டு கூடையையும் வாளியையும் எடுத்துக்கொண்டு வெளியேறினாள்.

நண்பர்களே... இந்த இடைப்பட்ட நேரத்தில் நான் செய்தது கேவலமான காரியம். என்றாலும், என் நிலையில் வேறு யார் இருந்தாலும் இதையே செய்திருக்க வாய்ப்பிருக்கிறது. இதை வெளிப்படையாகப் பகிர்ந்துகொள்வதன் மூலம் ஏனோ என் மனம் ஆசுவாசப்படுகிறது.

சிம்லி சென்றதும் அவசரஅவசரமாக அந்த இட்லிப் பொட்டலத்தைப் பிரித்து, அறையிலிருந்த சர்க்கரையைப் போட்டு வயிற்றில் தள்ளினேன். பசியில் விழி பிதுங்கி நீர் தள்ளியது.

கவனமாக அந்தப் பொட்டலக் காகிதத்தை மடித்து, ஓர் உறைக்குள் போட்டுப் பத்திரப்படுத்திக் கொண்டேன்- வெளியே போகும்போது குப்பையில் போட.

அடுத்த ஐந்தாவது நிமிடம் வெளியே சத்தம் கேட்டது. சிம்லியின் அம்மா...

கூடவே சிம்லியின் அழுகுரல்.

''எவன்கிட்டடி குடுத்த சொல்லு? நானே அஞ்சுக்கும் பத்துக்கும் நாய்படாத பாடு படறேன். நீ என்னாடின்னா துட்டைத் தாரவாத்துட்டு வந்து நிக்கறே...''

சிம்லியின் முகத்தில் அடி விழுந்தது; எனக்கு வலித்தது.

சிம்லியின் அழுகுரல் எனக்குள் குற்ற உணர்ச்சியைத் தூண்டியது.

சட்டென ஒரு பயம் அடி வயிற்றைக் கவ்வியது. ஒரு வேளை சிம்லி என்னைக் காட்டிக் கொடுத்து விடுவாளோ? அறையை விட்டு வெளியில் வராமல் மௌனமாய் இருந்துவிட்டேன்.

**சிம்லியின் தோற்றம் மாறி இருந்தது. நான் இரண்டொருமுறை. அவள் என்னை அடையாளம் காண்கிறாளா எனக் கூர்ந்து கவனித்தேன்.**

அதன் பிறகு வெகுநேரம் சிம்லியின் அழுகுரல், எனக்குள் தொடர்ந்து ஒலித்து இம்சித்துக்கொண்டிருந்தது.

சில நாட்கள் சென்றபின், இந்தச் சம்பவம் முழுசாக என் மனத்தை விட்டு நீங்கிய ஒரு காலையில் வாசல் பக்கமாக நின்றிருந்தபோது, கூடையுடன் சிம்லி வருவதைப் பார்த்தேன். அவள் என்னைப் பார்த்து வழக்கம்போல ''இட்லி வாங்கலியாண்ணா?'' எனக் கேட்பாள் என எதிர் பார்த்து நின்றுகொண்டிருந்தேன். என்னைப் பார்த்து எதுவும் பேசாமல் கடந்து சென்றாள். எனக்கு யாரோ பின் மண்டையில் அடித்தது போலிருந்தது.

அதன் பிறகு என் வாழ்க்கை எங்கெங்கோ உழன்று திரிந்து, இறுதியில் உதவிஇயக்குநராக மாறி படிப்படியாக வளர்ந்து, இன்று இயக்குநராகப் பேரும், புகழும் வசதியும் அடைந்துவிட்டேன்.

ஆனாலும் என் பசி காலத்து அந்தப் பறவைகளின் சத்தம் எப்போதாவது ஒரு முறை என் நினைவில் வந்து போகும். அப்படி வரும்போதெல்லாம் சிம்லியின் முகம் என் நினைவில் ஆடும்.

அன்று மாலையே ஏஜெண்டிடம் புகைப் படத்திலிருந்த மூவரைத் தேர்வுசெய்து மறுநாள் தேர்வுக்கு அழைத்து வரும்படி கூறியிருந்தேன். அதில் சிம்லியும் ஒருத்தி.

காலையில் அலுவலகத்தில் நுழையும் போதே மூன்று பெண்களையும் பார்த்து விட்டேன்.

சிம்லியின் தோற்றம் மாறியிருந்தது. நான் இரண்டொருமுறை, அவள் என்னை அடையாளம் காண்கிறாளா எனக் கூர்ந்து கவனித்தேன்.

ஏஜெண்ட்டை அழைத்து அதில் சிம்லியை அந்தப் பாத்திரத்துக்குத் தேர்வு செய்திருப்பதாகக் கூறினேன்.

அரைமணி நேரம் கழித்து என் உதவியாளன் மகேஷ் என் அறைக்கு வந்தான்.

''என்ன மகேஷ்?''

''ஸார் அந்தப் பொண்ணு நடிக்க மாட்டேன்னுடுச்சாம்.'' ஏன் என நான் மகேஷைக் கேட்கவில்லை. ●

## குழந்தை பேரின்மைக்கு விழிப்புணர்வு கருத்தரங்கு!

குழந்தை பேரில்லாத தம்பதிகள் கலந்துக் கொள்ளும் விழிப்புணர்வு கருத்தரங்கு சென்னை ஏ.கே.பி. ஹோமியோபதி மருத்துவ ஆராய்ச்சி மையம் ஏற்பாடு செய்துள்ளது. மருத்துவர்கள் கலந்துக் கொள்ளும் குழந்தை பேரின்மை கருத்தரங்கில் ஒரு பிரிவாக முதன் முதலாக இந்த கருத்தரங்கை நடத்துகிறது. இம்மாதம் 25.1.2009 **ஞாயிறு காலை 9 மணி முதல் 5 மணி வரை** சென்னை அண்ணா மேம்பாட்டு நிலையத்தில் நடைபெறும் இந்த கருத்தரங்கில் புகழ் பெற்ற மருத்துவர்கள் கலந்துக் கொண்டு பேசுவார்கள். தம்பதிகளின் கேள்விகளுக்கு பதில் அளிக்கிறார்கள்.

"பெரும்பாலும் குழந்தை பேரில்லாத தம்பதிகள் ஆப்ரேசன், ஐ.வி.எப். என்றும் நினைக்க ஆரம்பிக்கிறாங்க! பெரும்பாலான குறைகளை சிகிச்சையிலேயே சரி பண்ண முடியும்!" ஆண்களுக்கு இருக்கற விந்தனு பிரச்சனைகள், ஆண்மை கோளாருகளுக்கு நல்ல சிகிச்சை இருக்கு! ஆபரேசன் இல்லாம... வெரிகோசீல்ங்கிற இரத்த நாள புடைப்புகளில்ல கூட பலன் பெற்று இருக்காங்க.

பெண்களுக்கு இருக்கிற மலட்டு தன்மை பிரச்சனைகளில் PCOD, தைராய்டு கோளாறுகள் தான் அதிகம்! ஹார்மோன் கிசிக்சை இல்லாமலேயே நிறைய பேருக்கு சக்ஸஸ் பண்ணியிருக்கோம்! கருப்பை கட்டிகள், என்டோமெட்ரியோஸிஸ், அடினோமையோசிஸ், டியூப் பிளாக், இன்பெக்ஷன் தொந்தரவுலே கூட நல்ல சிகிச்சை ஹோமியோபதி மருத்துவத்துல இருக்கு!

"எல்லாத்துக்கு மேலே கவுன்சிலிங், தம்பதிகளுக்கு ரொம்ப ரொம்ப முக்கியம். மனப்பிரச்சனைகள், தாம்பத்திய உறவு பற்றிய சந்தேகங்களை தெளிவுபடுத்தின குழந்தை பேறுக்கு ஏதுவாவாங்க!" என்கிறார் பிரபல ஹோமியோபதி மருத்துவர் டாக்டர். ஆர். ஞானசம்பந்தம்.

மேலும் விபரங்களை பெற சென்னை, இராயபேட்டை, லாயிட்ஸ் ரோடு, ஹேமமாலினி மண்டபம் எதிரில் உள்ள ஏ.கே.பி. ஹோமியோபதி மருத்துவ ஆரோய்ச்சி மையத்தில் தொடர்பு கொள்ளலாம். தொலைபேசி எண். 044 - 2811 3300 www.homeomiracles.com என்ற இணைய தளத்தில் தெரிந்து கொண்டு பதிவு செய்யலாம். E-mail : gnanas@vsnl.com

■ கண்மணி ■

# "யாருடா மாப்ளே கேமரா?"



"திருவண்ணாமலையில் 'சாமிடா' படத்தை பார்த்துவிட்டு வெளியே வருகிறேன். 'யார்டா மாப்ளே இந்தப் படத்துக்கு கேமராமேன்? 'காசி'யை பார்த்தவுடனேயே மனசை என்னமோ பண்ணுதுடா' என்று ரெண்டு பேர் பேசிக்கொண்டு செல்ல, எனக்கோ தோள்களின் ரெண்டு புறமும் றெக்கை முளைக்காத குறைதான்'' என்று பரவசப்படுகிறார் 'சாமிடா' படத்தின் ஒளிப்பதிவாளர் ஸ்ரீஸ்ரீநிவாஸரெட்டி. 'மல்லி' குறும் படத்தின் ஒளிப்பதிவுக்காக தேசிய விருது பெற்றவர்.

''எல்லோருமே காசியை நோக்கித்தான் யாத்திரை போவாங்க. ஆனால், எனக்கு யாத்திரையே 'காசி'யில் தொடங்குது. அது இப்போ 'பூக்கடை ரவி' என நீண்டுகிட்டே போகுது. எல்லாத்துக்கும் காரணம் அந்த காசி விஸ்வநாதன் அருள்தான்'' என்கிறார் ரெட்டி!

''குறும்படங்களின் ஒளிப்பதிவுக்காக நிறைய அவார்ட் வாங்கியிருந்தாலும், என் மேல கமர்ஷியல் முத்திரை விழாமல் இருந்தது. 'சாமிடா' படம் மூலம் அந்த முத்திரை விழுந்தாச்சு. இனி ஒவ்வொரு படமும் கேமராவுக்காகவே பேசப்படும்'' என்கிறார் ஸ்ரீஸ்ரீநிவாஸ ரெட்டி. ■

■ சுதா சேஷய்யன் ■

# 15 ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம்

சஹஸ்ரார கமலத்தில் உள்ள அம்பிகையின் கையில் என்ன ஆயுதம் இருக்கிறது? **ஸ்ரவாயுததரா** - எல்லா ஆயுதங்களையும் தாங்கிக்கொண்டிருக்கிறாள்! எந்தெந்த சமயத்தில் எந்தெந்த ஆயுதம் பிரயோகம் பண்ண வேண்டுமோ அதனைப் பிரயோகம் செய்கிறாள்.

**சுக்ல ஸம்ஸ்திதா.** தோலில் (த்வக்ஸ்தா) ஆரம்பித்து மஜ்ஜை (மஜ்ஜா ஸம்ஸ்தா) வரை போயாயிற்று. சஹஸ்ரார கமலத்தில் உள்ள அம்பிகை, சுக்ல தாதுவுக்கு அதிதேவதையாக இருக்கிறாள்.

## தலைமுறைகளைக் காப்பவள்

கொஞ்சம் யோசித்துப் பார்த்தோமானால், இதற்குள்ளே இருக்கக்கூடிய ஆழமான பொருள் புரியும். சுக்லம் என்பதுதான் அடுத்த தலைமுறைகள் உருவாவதற்குக் காரணமாக இருக்கக்கூடியது என்றால், வழி வழியாக ஸந்ததியைக் காப்பாற்றக் கூடியவளாக இருப்பவள் அம்பிகை என்று ஆகிறது அல்லவா?

இந்த ஸர்வதோமுகிக்கு என்ன அன்னம் பிடிக்கும்? அனைத்து அன்னங்களும் பிடிக்கும் : **ஸர்வௌதன ப்ரீத சித்தா.** ஸர்வ அன்னமும் ப்ரீதி!

இப்படி இருக்கக்கூடியவளுக்கு என்ன திருநாமம் இந்த ஆதார சக்கரத்தில் என்றால், **யாகின்யம்பா ஸ்வரூபிணி.** ஸஹஸ்ரார கமலத்தில் நிலைபெற்றிருக்கும்போது, அவள் பெயர் யாகினி.

விதவிதமான பெயர்கள் இருக்கின்றனவே என்று நாம் கேட்கலாம். மதுரையில் இருக்கும்போது மீனாக்ஷி என்று திருநாமம். காஞ்சிபுரத்தில் காமாக்ஷி! ஒவ்வொரு இடத்தில் நிலைபெறுகிறபோதும் அந்தந்த இடத்துக்கு உரிய திருநாமம் ஏற்பது போல, அந்தந்த ஆதார சக்கரத்துக்கு ஏற்ற திருநாமம் உடையவளாக இருக்கிறாள். ஸஹஸ்ரார கமலத்தில் அவள் யாகினி.

# வேத வடிவினள்!

இந்த சஹஸ்ரார கமலத்தில் அவளுடைய தோற்றத்துக்கு எத்தனை முகங்கள்? **ஸர்வதோமுகீ.** ஒரு முகம், இரண்டு முகம் என்று வளர்ந்துகொண்டே ஷடானனா என்று ஆறுமுகங்கள் வரை வந்தது. இப்போது ஏழாவது நிலையில் ஏழு முகங்கள் என்று வராமல், **ஸர்வதோமுகீ** என்று, எண்ணிக்கைக்கு அப்பாற்பட்ட முகங்கள் உடையவளாகத் திகழ்கிறாள்.

இப்படி, கிட்டத்தட்ட 64 திருநாமங்கள், ஆதார சக்கர வழிபாட்டுக்குரிய திருநாமங்களாக அமைந்துள்ளன.

சமயாசார வழிபாட்டு முறைக்கு இணங்க இந்த ஆதார சக்கர நாமங்கள் அமைந்திருந்தாலும், அம்பாள் தன் குழந்தைகளைக் காப்பதற்கு என்னென்ன ரூபங்கள் எடுத்துக்கொள்கிறாள் என்பதையும் இந்தத் திருநாமங்கள் உணர்த்துகின்றன.

## வேதமும் வழக்கமும்

**அ**டுத்து **ஸ்வாஹா, ஸ்வதா** - இந்த இரு திருநாமங்களுமே யாக கர்மாவோடு தொடர்புடையவை. **ஸ்வாஹா** - என்று சொல்லி அக்னியில் அஹுதி வழங்குவது வழக்கம். தேவதைகளுக்கு ஹவிஸ் கொடுக்கும்போது 'ஸ்வாஹா' என்றும் பித்ருக்களுக்கு ஹவிஸ் கொடுக்கிறபோது 'ஸ்வதா' என்றும் கூறி அளிப்பதுண்டு.

ஹவிஸ் அனுப்புகிறபோது தேவதைகளுக்கும் பித்ருகளுக்கும் என்ன திருப்தி கிடைக்குமோ அந்தத் திருப்தியின் வடிவமாக இருக்கக் கூடியவள் என்று இந்தத் திருநாமங்களுக்குப் பொருள்.

**அ**டுத்து வரும் திருநாமங்கள் இன்னும் அழகு! **மதி, மேதா** - 'மதி' என்பது நமது அறிவு அல்லது புத்திசாலித்தனம். 'மேதா' என்பது, மேதாவிலாஸம் என்று சொல்கிறோமே, அந்த புத்தியின் பொருளாக, அதன் அழகாக இருக்கக்கூடியவள்.

**ச்ருதி** - வேத வடிவினள்.

**ஸ்ம்ருதி** - வேதங்கள் கூறும் நிர்ணய வாக்கியங்களின் ரூபமும் அவளே.

ச்ருதிக்கும் ஸ்ம்ருதிக்கும் கொஞ்சம் தான் வித்தியாசம். ச்ருதி என்பது கேட்கப்படுவது; ஸ்ம்ருதி என்பது நினைவில் வைத்துக்கொள்ளப்படுவது. ஸ்மரணம் என்பதிலிருந்து வந்த சொல்தான் ஸ்ம்ருதி - மீண்டும் மீண்டும் நினைவு கூர்வது.

ஆனால், காலப் போக்கில், வேதங்கள் ச்ருதி; அவற்றிலிருந்து உருவாகியிருக்கக் கூடிய சட்ட திட்டங்கள் ஸ்ம்ருதி என்று பொருள் மாறிற்று. வேதத்தை இப்படி உச்சரிக்க வேண்டும் என்று உச்சரித்து, கேட்கச் செய்வது ச்ருதி; அதனுள் இருக்கும் பொருளை நினைவில் வைத்துக்கொண்டு, வாழ்க்கையில் கடைப்பிடிக்க உறுதிகொள்வது என்பது ஸ்ம்ருதி. அதனால்தான் மனு ஸ்ம்ருதி, யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி என்றெல்லாம் code of conduct உருவாயிற்று. காலப்போக்கில் யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதிக்கு முக்கியத்துவம் குறைந்து மனு ஸ்ம்ருதிக்கு முக்கியத்துவம் அதிகமாயிற்று. இன்றைக்கும் யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி இருக்கிறது; ஆனால் எங்கேயிருக்கிறது என்று தெரியாமல் ஓர் ஓரத்தில் இருக்கிறது. மனு ஸ்ம்ருதியே இன்றைய காலத்துக்குப் பொருந்துமா என்று நாம் கேட்க ஆரம்பித்திருக்கிறோம்.

**அந்தந்த இடத்துக்கு உரிய திருநாமம் ஏற்பது போல, அந்தந்த ஆதார சக்கரத்துக்கு ஏற்ற திருநாமம் உடையவளாக இருக்கிறாள். ஸஹஸ்ரார கமலத்தில் அவள் யாகினி.**

ச்ருதியாகிய வேதத்தை அடிப்படையாகக் கொண்டுதான் ஸ்ம்ருதி என்கிற நடைமுறைக் கோட்பாடு உருவாகிறது. ஆனால், இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், ச்ருதி என்பது மாறவே மாறாது. ஸ்ம்ருதி என்பதோ பல சமயம் மாற்றங்களை அனுமதிக்கிறது. அதனால்தான் பலவித ஸ்ம்ருதிகள் தோன்றின - யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி, மனு ஸ்ம்ருதி, குமார ஸ்ம்ருதி என்று உருவாகின. சில சமயம், காலத்துக்குத் தகுந்தமாதிரி நாம் சட்டங்களை மாற்ற வேண்டிய அவசியம் வரும்; ஆனால் அந்தச் சட்டத்துக்கான அடிப்படைகள் மாறாது; அதை நடைமுறைப் படுத்தும் விதம் மாறும். எல்லோரும் நன்றாக இருக்க வேண்டும். ஒருத்தருக்

கொருத்தர் தீங்கு செய்யக்கூடாது என்கிற அஹிம்சை தர்மம் எல்லா சட்டங்களுக்கும் எக்காலத்துக்கும் பொது. அதேசமயம் மரண தண்டனையை நிறைவேற்ற வேண்டும் என்கிறபோது இந்த அடிப்படை மாறுகிறது. ஒருவர் தவறு செய்திருந்தால் - அதனால் நிறைய பேருக்குத் தீமை நிகழ்ந்திருந்தால் - அத்தகையவரைத் தண்டிப்பது என்பது ஹிம்சையில்லை.



- இப்படி விதிப்பது ஸ்ம்ருதி. இது காலத்துக்குக் காலம் மாறும்; இடத்துக்கு இடமும் மாறும். இந்த நாட்டுச் சட்டம் வேற்று நாட்டில் பொருந்தாது. இந்தக் காலத்துக்கான சட்டம் எதிர்காலத்துக்குப் பொருந்தாமலும் போகலாம்.

ச்ருதி - ஸ்ம்ருதிக்கிடையே வேறுபாடு இதுதான். அம்பிகை, தானே **ச்ருதி**யாகவும் இருக்கிறாள், **ஸ்ம்ருதி**யாகவும் இருக்கிறாள். **அனுத்தமா** என்று எல்லையில்லாத, எந்த அளவையினாலும் அளவிடமுடியாத, தனக்கு நிகராக ஒன்று இல்லாதவளாக, எங்கோ உயரத்தில் இருக்கிறாள்.

## இந்திராணியின் வேண்டுதல்

**புண்யகீர்த்தி:-** புண்ணியத்தினுடைய பெருமையாக இருக்கக்கூடியவள்.

**புண்யலப்யா** - புண்ணியத்தினால் லபிக்கக்கூடியவள் - நல்லனவற்றைச் செய்தால், அதன் பயனாக நமக்குக் கிடைக்கக்கூடியவள்.

**புண்ய ச்ரவண கீர்த்தனா** - நல்ல விஷயங்களால் ஆராதிக்கப்படக் கூடியவள்; அவற்றில் உறைபவள். சிரவணத்தினாலும் கீர்த்தனத்தினாலும் ஆராதிக்கப்படக் கூடியவள். சிரவணம் என்றால் நல்லவற்றைக் கேட்டல்; கீர்த்தனம் என்பது உயர்ந்த விஷயங்களைப் பேசுவது, பாடுவது.

**புலோமஜ அர்ச்சிதா** - இது அடுத்த திருநாமம். இந்திராணியினால் வழிபடப்படுகிறவள் என்று இந்தத் திருநாமத்துக்குப் பொருள். இந்திரனுக்கு ஆபத்து வந்தபோதெல்லாம், இந்திராணி அம்பாளை வேண்டி, வேண்டி, வேண்டி, அந்த ஆபத்துகளெல்லாம் விலகின. அது மட்டும் அல்ல. லலிதாம்பிகையாகத் தோன்றியவள், இந்திரன் செய்த யக்ஞத்திலிருந்துதானே தோன்றினாள். அந்த தேவேந்திரன் நல்ல பதியாக இருக்க வேண்டும் என்பதற்காக இந்திராணி அம்பிகையை வழிபட்டாள். ஆகவே இந்தத் திருநாமம்.

**(வளரும்)**






“டப்பிங் பேசறது ரொம்பக் கவனமா செய்ய வேண்டிய ஒரு கலை. ஞாபக சக்தி, குரல் உச்சரிப்பு எல்லாம் சரியா இருக்கணும். ஸ்கிரீன்ல உதடு அசையறதுல கவனமா இருக்கணும். அதே அளவுல நம்ம அசைவும் இருக்கணும். அப்பதான் பொருந்தும். இல்லேன்னா லிங்க் ஆகாது'' என்கிறார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட படங்களில் பின்னணிக் குரல் கொடுத்திருக்கும் எம்.எஸ். பாஸ்கர்.

சமீபத்தில் Bad Boys-ல் நீக்ரோக் காரெக்டருக்கான பின்னணிக் குரல் கொடுத்தவர்.

''தெலுங்குல இருந்து தமிழ், மலையாளத்துல இருந்து தமிழ், ஹிந்தியில் இருந்து தமிழ், இங்கிலீஷ்ல இருந்து தமிழ்... இப்படி டப்பிங் படங்கள் வருது. அந்த மொழியோட உச்சரிப்புக்கு ஏத்த மாதிரி, தமிழ்லயும் வசனங்கள் எழுதுவாங்க. அதை அந்த காரெக்டர் பேசற வேகத்துக்கு ஏத்த மாதிரி பேசணும். ஒரு பிச்சைக்கார கேரக்டர்னா அதுக்கு ஏத்த மாதிரி, ஒரு போலீஸ், வக்கீல்... இப்படி கதாபாத்திரம் எதுவோ அதுக்கு ஏத்த மாதிரி குரலும், உச்சரிப்பும் இருக்கணும். அந்த ஸீன்ல இருக்கற உணர்ச்சிகள் குரல்ல வரணும். ஆஜானுபாகுவா இருக்கற ஆளுக்குக் குரல் கொடுக்கும் போது, கணீர்னு குரல் அமையலைன்னா, அந்த கேரக்டரே அடிவாங்கிடும். அதேமாதிரி, வார்த்தைகளைச் சரியா உச்சரிக்கலேன்னாலும் நல்லாயிருக்காது'' என்ற எம்.எஸ்.பாஸ்கர் தாம் அடைந்த மிகச் சிறந்த சந்தோஷம் ஒன்றையும் சொன்னார்.

''பெருந்தலைவர் காமராஜர் வரலாற்றை அவர் பேர்ல படமா எடுத் தாங்களே... அதுல காமராஜருக்கு நான்தான் பின்னணி பேசினேன். உண்மையிலேயே உள்ளூர நடுக்கம்தான். ஏன்னா, அவரோட குரல், உச்சரிக்கிற விதம் தெரிஞ்சவங்க பலர் இருக்காங்க. அதனால ரொம்ப ரொம்பக் கவனமா செய்தேன். அதுக்கு ஒரு பத்திரிகைல விமர்சனம் எழுதினாங்க: காமராஜரோட குரலில் வாழ்ந்திருக்கிறார் எம்.எஸ்.பாஸ்கர்னு.''

சரி; எந்த அடிப்படையில் இப்படி டப்பிங் படங்களைத் தேர்வு செய்கிறார்கள்? அதைச் சொல்கிறார் தயாரிப்பாளரான செல்வம்:

''முக்கியமா ஆக்ஷன் படங்கள்தான் டப்பிங்க்கு சாய்ஸ். ரெண்டாவதா, நல்ல சப்ஜெக்ட்டா அமைஞ்சு, புதுமுகங்கள் நடிச்ச படங்களா இருந்தாலும் பண்ணலாம். அடுத்தது பெரிய ஹீரோ அல்லது ஹீரோயின் நடிச்ச படங்களைப் பண்ணலாம். தெலுங்குல இருந்து தமிழ்ல 'டப்' செய்த




■ அநிருத் ■






# செலக்‌ஷன்தான் முக்கியம்!

'இதுதான்டா போலீஸ்', 'வைஜெயந்தி ஐ.பி.எஸ்...'லாம் ஒரிஜினலைவிட வசூலை வாரிக் குவித்த படங்கள். சமீபத்துல விஷால் நடிச்சு தெலுங்குல 'டப்' செய்யப்பட்ட பல படங்கள் வசூல்ல அங்கே கலக்கிட்டிருக்கு. அதனால ஒரு படத்தை 'டப்' செய்யறதுக்கு முன்னால, செலக்ட் பண்ணணும்.''

சமீபத்தில் சாமி இயக்கத்தில் வெளியான 'மிருகம்', தெலுங்கில் 'டப்' செய்யப்பட்டு, நன்றாகப் போய்க் கொண்டிருக்கிறது.

''டப்பிங் படங்களை எடிட் பண்றது இன்னொரு வகையான வேலை. அதாவது, தெலுங்குல, இந்தில 2 ¾ அல்லது 3 மணி நேரம் ஓடற படமாக இருக்கும். அதைத் தமிழுக்குக் கொண்டு வரும்போது ரீ எடிட் பண்ணுவோம். அதை இரண்டரை மணி நேரமா மாத்துவோம். அதுக்கு அப்புறம் டயலாக், ஸாங்ஸ் எல்லாம் சேர்த்து ப்ரிண்ட் ரெடி ஆகும்.

முன்பைவிட, இப்ப டப்பிங் படங்கள் பண்றது ஈஸி. ஏன்னா, டிஜிட்டல் ஸிஸ்டம் வந்துட்டதால, அதிகமான பிரிண்ட் போட வேண்டிய அவசியமில்லை. அதனால, டப்பிங் படம்னா மினிமம் கியாரண்டி கண்டிப்பா உண்டு'' என்கிறார் எடிட்டரான சதீஷ் பி.கொட்டை.



* சதீஷ் பி.கொட்டை



* செல்வம்



* எம்.எஸ்.பாஸ்கர்

மினிமம் முதலீடு, மினிமம் கியாரண்டியான வருமானம் - என்று மினிமம் ரிஸ்க்கோடு சுழல்கிறது டப்பிங் உலகம்!



* ஸ்ரீ

**நா**தஸ்வர சக்ரவர்த்தி டி.என். ராஜரத்தினம் பிள்ளையின் ஓவியத்தில் அவரது உருவத்துடன், பண்டிட் நேரு, பாராளுமன்றம், (அங்கே வாசித்திருக்கிறார் பிள்ளைவாள்), வீதி உலா என்று பல பரிமாணங்களைக் கொண்டுவந்திருக்கிறார்.

# “குறைகளைச் சொல்லுங்கள்!”

செம்மங்குடியின் ஓவியங்களில் முகபாவம் அபாரம்! மதுரை மணி ஐயரின் ஓவியத்துடன் தஞ்சை பெரிய கோயில். (தஞ்சை மக்களால் அவருக்கு அளிக்கப்பட்டது 'கான கலா தரா' பட்டம்). அரியக்குடிக்குப் பின்னணியாக நாலாயிர திவ்யப்பிரபந்தமும், ஸ்ரீரங்கம் கோயிலும். ஓவியம் வரைய ஆரம்பிப்பதற்கு முன்னால் ஏகப்பட்ட ரிசர்ச் நடந்திருக்கிறது. இசையுலக ஜாம்பவான்கள் பத்து பேரை இப்படி ஓவியங்களாக வரைந்துள்ளார் ஏ.பி.ஸ்ரீதர்.

**தா**ஜ்கொரமண்டல் நட்சத்திர ஓட்டலில் நடந்த ஓவியக் கண்காட்சி துவக்க விழாவில், ஆர். வேதவல்லி, ஆலப்புழா வெங்கடேசன், சுதா ரகுநாதன், அனுராதா ஸ்ரீராம், அவருடைய கணவர் ஸ்ரீராம் பரசுராம்... ஆகியோர், ஓவியங்களைத் திறந்து வைத்து இசை நினைவுகளைப் பகிர்ந்துகொண்டனர். அரியக்குடியின் கடைசி சீடரான ஆலப்புழா வெங்கடேசன் தமது பேச்சின்போது கூறிய நெகிழ்வூட்டும் சம்பவங்களும், செய்திகளும் பல. ஸ்ரீராம் பரசுராம், இசை பற்றி மட்டுமின்றி, ஓவியம் பற்றியும் இசை-ஓவியம் தொடர்பு பற்றியும் அலசினார். சுஜாதா விஜயராகவன், நடன மணிகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று ஆலோசனை கூறினார்.

ஏற்கெனவே, தபலா கலைஞர் ஜாகிர் உசைனின் ஓவியங்களைக் கொண்ட கண்காட்சி ஒன்றை நடத்தியவர் ஸ்ரீதர்.

“**க**ர்நாடக இசையின் மாமனிதர்களை ஓவியமாகத் தீட்டுவது பெரும் சவாலாக இருந்தது. அவர்களது பன்முகப் பரிமாணத்தின் ஒருசில பக்கங்களை மட்டுமே என்னால், வண்ணத்தில் கொண்டுவர முடிந்திருக்கிறது. இதில் ஏதாவது குறையிருந்தால், சுட்டிக்காட்டுங்கள்; அடுத்த இசைவிழா சீசனுக்கு திட்டமிட்டிருக்கும் இரண்டாம் பாகத்தில் கவனமாக இருக்கிறேன்” என்கிறார் ஸ்ரீதர்.

– எஸ்.சந்திரமௌலி

எதிர்ப்புறம் ஓவியங்கள்...

